உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில்:

அம்பலத்தாடும் அழகனின் திருக்கோலம்
திருவாதிரை சிறப்பு நோக்கி
வெளியிடப்பெற்றது.

# அன்பர்களுக்கு ஓர் அவசர அழைப்பு

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித்
தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அதிபர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்.





அன்பர்களே,

'சைவத்தின் மேற் சமயம் வேறில்லை;
அதில் சார் சிவமாம்
தெய்வத்தின் மேல் தெய்வம் வேறில்லை'

இந்த வாக்கு, சத்தியவாக்கு! இப்படிச் சொன்னவுடன் சைவத்தைப்பற்றி - இந்த நம் தெய்வத்தைப் பற்றி ஏதோ வியாக்கியானம் செய்யப் போகிறோம் என்று நினைக்காதீர்கள். இப்பொழுது நம் கவலையெல்லாம், இந்தச் சமயத்தின் மக்கள் - திருக்கோயில் பணியாளர்கள் - பற்றியவைதாம்.

நேற்றைய வரலாறு நம்மை நெஞ்சு நிமிரச்செய்வது உண்மைதான்!

இன்றைய நிலவரங்கள் சற்றுக் கலவரமாக இருப்பதை நம்மால் மறுக்க முடியவில்லை!

நாம் இப்படியே இருந்து கொண்டிருந்தால் நாளைய நிலை எதுவாக இருக்கும்? எண்ணிப் பார்க்கிறோம். பக்திக்காக மட்டும் கலங்கும் நம் கண்கள் இந்தக் கேள்விக் குறியாலும் குத்தப்பட்டுக் குளமாகாதா?

திடீர் திடீர் என்று வருகின்ற சட்ட 'இடி' களால் திருக்கோயில் திருமடங்களின் அஸ்திவாரங்கள் அடிபடு வதைப்பற்றி இங்கேநாம் விமரிசிக்கப்போவதில்லை.

'கடவுளை நாமொன்றும் காப்பாற்றவேண்டிய அவசியம் இல்லை'! அவன் இந்த நூற்ருண்டின் இறுதியில் நமக்கு இப்படி ஒரு தேர்வு வைத்துப் பார்க்கிருன் என்றே நாம் நினைக்கிரேம்.

அரசர்கள், ஞானிகள், முன்னேர்கள் எல்லாம் என்ன சொன்னர்கள். 'ஆவி அளித்தானே; அகிலம் படைத்தானே அண்டங்கள் வைத்தானே; அந்த ஆண்டவனுக்கு - அவன் திருமேனிக்கு ஆறுகால பூஜை நடத்தி, அலங்காரங்கள், அபிஷேகங்கள், தத்துவ விழாக்கள் செய்து அமைதி பெறுங்கள், நன்றிக்கடன் செலுத்த முற்படுங்கள்!' என் றல்லவா நமக்குக் கட்டளை இட்டார்கள்?

மன்னர்கள் காலத்துக்குப் பிறகு தனவணிகர்கள் நகரத்தார் குலத்து நல்லவர்களெல்லாம் திருக்கோயில் பணிகள் செய்ததெல்லாம் நினைத்துப்பார்க்கின்ரேம்.

இன்றைய நடப்பு என்ன?

நாளொன்றுக்கு ஆறுகாலம் என்பது வாரத்திற்கு ஏழு காலம் ஆகிவிட்டதே பலகோவில்களில்! இன்னும் பல கோயில்கள் வாரத்திற்கு ஒருமுறை தான் திறக்கவேபடு கின்றன.

கோழம்பம் என்ற தலத்தின் நிலைபற்றி அண்மை யிலே கேள்விப்பட்டோம்! அது தேவாரம் பெற்ற திருத் தலம்! அங்கே ஆண்டவனுக்குப் பரிவட்டமில்லை! விளக்குக்கு எண்ணெ இல்லை! அதிகமாகச் சொல்வானேன்? அடைக்கப்பட்ட கதவுகளுக்குள்ளிருந்து ஆண்டவன் சிரித்துக்கொண்டே கேட்கிருன்:- 'என்மக்களே! என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?' என்று.

ஓர் உதாரணமன்று; ஓராயிரம் சொல்லலாம்! இன்றைய நிலையில் நிலங்கள் உள்ள கோயில்களுக்கும் நிலங்கள் இல்லாத கோயில்களுக்கும் அதிகவித்யாசமில்லை; பட்டாப் பத்திரங்களை பீரோவில் அடுக்கி வைத்துக் கொண்டிருக்கும் 'பெருமை'யைத்தவிர.

கோயில்களின் கதியே இதுவென்றால் அங்குப் பணி புரியும் பணியாளர்களின் பரிதாப நிலையைக் கேட்கவா வேண்டும்?

ஆகமங்களையும் சாஸ்திரங்களையும் மந்திரங்களையும் கற்று மாதம் ஒன்று அல்லது இரண்டு கலத்தில் ஊதியம் பெற்றுப்பூஜைசெய்கிறார்கள். ஆதிசைவர் என்றுபாராட்டிப் பேசுகிறோம்; குருக்கள் என்று மரியாதை தருகிறோம். இந்த மரியாதைகள் அவர்களின் வாழ்க்கைக்கு எந்த அளவுக்குப் பயன்படும்?

தேவாரம் திருவாசகம் உள்ளிட்ட திருமுறைகள் திருப்புகழ் மற்ற பக்திப் பாடல்களைப் பண்முறைப்படி பாடும் ஓதுவாமூர்த்திகளின் வருமானங்கள் பற்றி விசாரித்துப் பாருங்கள்!

அவர்களின் வருமான வாயில்களை எவ்வளவு குறுகிய தாக நாம் கட்டிவைத்திருக்கிறோம் என்பதைச் சற்று நாணத்தோடு ஒத்துக் கொள்ளத்தான் வேண்டும்!

கோயில், மடங்களில் எல்லாவகைப் பணியாளர்களின் முழுக்குரலும் 'குறை' தான்!

நம் சமயம் சார்ந்தவர்களின் பலகுடும்பப் படகுகளும் துடுப்பில்லாமல் ஆறுகளில் கிடக்கின்றன. அதன் போக்கு களை உல்லாச சவாரி என்று எப்படிச் சொல்ல முடியும்?

நம் வாழ்த்துதலுக்குரிய சமய அன்பர்களே!

மேலே கூறிய நிலைமைகளை நாம் மட்டும் சரிசெய்து விட முடியாது என்பது நீங்கள் அறியாததன்று! மடங்

களின் இப்பொழுதைய நிலைகளையும் நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்கள். முன்னோர்கள் வைத்துள்ள தருமங்களை - கல்வி நிலையங்களை - பிறபணிகளைத் தொடர்ந்து செய்வதற்கே பொருளாதார நிலை மூச்சுவாங்குவது உங்கள் காதுகளுக்கு எட்டாமலிருக்குமா என்ன? பெரிய கட்டடங்களைப் பார்த்துக் கற்பனைசெய்வதெல்லாம் பிரதியட்சமாவதில்லை; அதெல்லாம் ஒருபுறமிருக்கட்டும்!

திருநெல்வேலி திரு. டி. வி. சங்கரக்குமாரு 14.11.80ல் நம்மை நெல்லையில் சந்தித்தபோது நேரில் பேசியதுடன், 17.11.80 அன்று நமக்கு நீண்டதொரு விண்ணப்பமும் அனுப்பியிருந்தார். நம் சிந்தனைகளின் ஒருபகுதியையே அவ்விண்ணப்பமும் தாங்கியிருந்தது.

அவசிய அவசரத் தேவைகள் நம்மெதிரிலே விஸ்வரூபமெடுத்து நிற்பதைப் பாருங்கள்!

பூஜையே இல்லாத கோயில்களில் ஒருகால பூஜையாவது நடைபெற வேண்டும்; இல்லாவிட்டால் இந்தத் தேசத்திற்குச் சுபிட்சம் வரவே வாய்ப்பு இல்லை!

வருமான வாய்புக் குறைவாக இருந்தும் பூஜை செய்து வரும் சிவாசாரியார்கள், திருமுறைவாணர்களுக்கு உடனடியாக நிதிவுதவி செய்தாக வேண்டும்.

பரிவட்டம் இல்லாத கடவுள் திருமேனிகளுக்குப் பரிவட்டங்கள் சமர்ப்பிக்க வேண்டும்.

ஒரு விளக்காவது திருவிளக்கு எரிய - எல்லாத் திருக்கோயில்கட்கும் ஏற்பாடு செய்தாக வேண்டும். கடவுள் திருமேனிகட்கு மெய்ப்பூச்சுக்கு எண்ணை அளித்தாக வேண்டும். பணியாளர்களின் நல்வாழ்வுக்குத் துணை நிற்க வேண்டும்!

பின்னே பின்னே வசதி வாய்ப்புக்களைப் பெருக்கிக் கொண்டு பலதிருக்கோயில்களின் பழுதுபார்க்கும் பணியைச் செய்தாக வேண்டும்!

இப்பொழுது தெரிகிறதா! நம் கடமைகள் மலையளவுக்கு இருக்கிறதே! மலைக்க வேண்டாம். ஊர்கூடித் தேர் இழுத்தால் சுலபம்தான்!

இவை சைவ சமுதாயப் பணிகள்!

நம்மால் இயன்றவரை இந்தப் பணிகளைச் செய்து கொண்டுதான் இருக்கிறோம். சிவாசாரியார் படிக்காசு நிதிகள், ஓதுவா மூர்த்திகட்கு ஊதியநிதிகள், திருவிளக்கு நிதிகள், திருக்கோயில் பூஜைக் கட்டளை நிதிகள், சிறப்பு பூஜை நிதிகள் ஆகிய வகைகளில் பல ஆயிர ரூபாய் மூலதனங்களின் வருமானங்களில் அவ்வகைத் தருமங்களை நாம்நடத்திவருவது நீங்கள் அறியாதவையல்ல.

நாடு தழுவிய அளவுக்கு மேலே கூறிய அனைத்துக் காரியங்களையும் செய்வதற்கு எண்ணும்எண்ணத்தாலேயே, வேட்கையினாலேயே இந்த அறிக்கை பிறந்துள்ளது.

ஒவ்வொருவரும் நிதி அனுப்புங்கள், நண்பர்களையும் உறவினர்களையும் அனுப்பச் செய்யுங்கள். சிறுதொகை கொடுத்தாலும் அன்புடன் ஏற்கிறோம். பெருந் தொகை இல்லையே என்று வாளா இராதீர்கள்; இயன்ற அளவு கொடுங்கள்; கொடுக்கச் செய்யுங்கள்.

மேலே கூறிய பணிகள் அவசியமாகும் இடங்களின் பட்டியலை, பணிமுறைகளை, பணி செய்ய முன்வரும் தொண்டர்களின் பட்டியலை அனுப்புங்கள்.

இந்தப்பணிகளை ஓர் இயக்கமாகவே ஆக்குவோம். மாபெரும் நிதி ஏற்படுத்துவோம்! சமயத் தேவைகளைச் சரியாகக் கணித்து நிவர்த்திப்போம்!

கைக்கெட்டும் தூரத்தில் பொற்காலம் உள்ளது என்ற உற்சாகத்துடன் செயல்படுங்கள்.

நம் திருமடத்தின் ஏடான ஸ்ரீ குமரகுருபரர் திங்கள் இதழின் ஒருபகுதி இத்திட்ட முழக்கங்களின் குரலாக அமையும். நிதி அளிப்பவர்களின் பெயர்களையும் திட்ட வெற்றிகளின் நிலைமைகளையும் இது வெளியிடும்.

இப்புனிதத் தொண்டில் எல்லோரும் ஈடுபடுங்கள்; எல்லோரையும் ஈடுபடுத்துங்கள்! உங்கள் அனைவருக்கும் அங்கயற்கண் அம்மை சமேத ஆலவாய் அண்ணல் திருவருள் உண்டு! செந்திற் கந்தன் திருவருள் உண்டு!

— **சிவ சிவ**

M. O. கள், டிராப்டுகள் அனுப்பவும் - கடிதத் தொடர்பு கொள்ளவும் - முகவரி:-

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள்**
அதிபர், ஸ்ரீகாசிமடம்
திருப்பனந்தாள் 612 504
தஞ்சை மாவட்டம். தெ. இந்தியா



# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 3 மார்கழி பகுதி 4

## அழைப்பின் இணைப்பு

அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி **எஜமான் சுவாமிகள் அவர்கள்** சைவசமயத்தின், சைவர்களின் மேன்மைக்காகவும், வளர்ச்சிக்காகவும் மாபெரும் திட்டங்களை வகுத்துள்ளார்கள். மேன்மை கொள் சைவநீதி உலகெலாம் விளங்குதற்கு அவர்கள் முன் வைத்துள்ள திட்டங்களை அவர்களே விளக்கி 'அன்பர்கட்கு ஓர் அவசர அழைப்பு' என்ற தலைப்பில் பத்திரிக்கைக்கான அறிக்கை வெளியிட்டுள்ளார்கள். அந்த அறிக்கை இந்த இதழுடன் இணைக்கப் பெற்றுள்ளது. அந்த அறிக்கையின் பிரதிகள் வேண்டும் அன்பர்கள் நேரில் எழுதுங்கள். சைவ அன்பர்கள் இல்லங்களிலெல்லாம் சென்று தந்து அத்திட்டங்கள் வாகை சூட உதவ வேண்டுகிறேன். கடல் கடந்த நாடுகளில் உள்ள சைவர்களின் இல்லங்களுக்கெல்லாமும் இந்த அறிக்கையின் பிரதியை அனுப்ப வேண்டுகிறேன். இதை ஓர் இயக்கமாகவே ஆக்கிச் சைவசமயத்தின் சால்பை நிலைநாட்டச் சூளுரைப்போம். விரிவான விவரங்கட்குக் கடிதத் தொடர்பு கொள்ளுங்கள்.

'உதவாதினி ஒருதாமதம்
உடனே விழி தமிழா' —என்ற

கவிதைத் தொடர் இன்று நமக்குச்சொன்னதாகக் கொள்வோம்.

இந்த மார்கழி இதழில் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் பண்டார மும்மணிக்கோவை விளக்கமாக ஏழு பிறப்புக்கள் யாவை, 84 லட்சம் யோனி பேதங்கள் என்றால் என்ன? நான்கு வகைத் தோற்றங்கள் யாவை? என்பன போன்ற நுணுக்கமான செய்திகளை மிக எளிமையாகவும் இனிமையாகவும் விளக்கியருளியுள்ளார்கள்.

திருவாரூர் நான்மணிமாலைப் பாடல் விளக்கம், விடையரங்கம், சித்தாந்த சாஸ்திரங்கள், இருபா இருபஃது விளக்கம், சிறுகதை, நாடகம், நூல்நிறை, திருவிளையாடற் புராணம் உரைநடை முதலிய அங்கங்கள் இவ்விதழின் எழிலை மிகுக்கின்றன.

— நி. ஆ-ர்.



உ

சிவ சிவ

கன்னியாகுமரி ஆச்சிராமம் திருப்பனந்தாள்

திருமுறை அன்னம்பாலிப்பு வகையரு நிதி

சுசீந்திரத்தில் திருவாதிரைத் திருவிழாவில்

# தேவார கோஷ்டி



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்**

**சுவாமிகள்** அவர்களின்

அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது.

**20—12—80** முதல் **22—12—80** முடிய

சுசீந்திரம் ஸ்ரீ தாணுமாலய சுவாமி தேவஸ்தானத்தில்

நடைபெறும் மார்கழித் திங்கள்

திருவாதிரைத் திருவிழாவில்

**20—12—80** முதல் **22—12—80** முடிய ஷெ நிதியின்படி

தேவார இன்னிசைக் கோஷ்டி நடத்தப்பெறும்.

அன்பர்கள் தேவார இன்னிசை கேட்டு மெய்ஞ்ஞானம்

பெறுவாராக!

திருநெறிய தெய்வத் தமிழ் ஓதும் திருமுறைவாணர்கள்:

1. திருமுறைப்பணி. R. S. சிதம்பரம், நாகர்கோவில்.
2. திருமுறைப்பணி. A. கணேசம் பிள்ளை நாகர்கோவில்.
3. திருமுறைப்பணி. T. தம்பையா ஓதுவார்,
   ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், சுசீந்திரம்.
4. வேய்ங்குழல். சி. கோதண்டபாணி, நாகர்கோவில்.
5. மிருதங்கம். K. பகவதிபெருமாள் பிள்ளை, சுசீந்திரம்.

ஆணைப்படி,

ஆச்சிராமம், 1—12—80. | பா. கனகசபாபதிப் பிள்ளை ஏஜன்டு, ஸ்ரீகாசிமடம்.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச்சுவை

ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் என்னும் ஞான உழவருக்கு விளை நிலம் எவ்வளவு என்று ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஒரு கணக்குக் கொடுக்கிறார். எண்பத்து நான்கு லட்சம் வயல்கள் அவர் ஞானம் விளைவிக்கும் வயல்கள் என்கிறார். இவருக்கு மிஞ்சிய செல்வர் யாருள்ளார் என்று நாம் வியப்பில் மூழ்கவைக்கிறார். இப்படி வியப்பில் மூழ்கும் நாமும் அவர் ஞானம் விளைவிக்கும் வயல்களில் ஒருவயல்தான்!

பிறப்புக்களைத் தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்று ஏழுவகையாகப் பிரிப்பார்கள். இவற்றைத்தான் 'ஏழு பிறப்பு' என்று திருவள்ளுவரும் தெரிவிக்கிறார்.

> ''ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
> எழுமையும் ஏமாப் புடைத்து''

என்ற குறளில் 'எழுமை' என்று குறிப்பதும் இந்த ஏழு வகையான பிறப்புக்களையே என்று அறிதல்தகும். இதனைப் பிறப்பின் பெரும் பிரிவுகள் என்று கொண்டு வகைக்கு எத்தனை உள்ளன அல்லது படைக்கப் பெற்றன என்பதற்கும் நம்முன்னோர் ஒரு பட்டியல் வைத்துள்ளனர். யோனி பேதங்கள் என்று அப்பட்டியலைக் குறிக்கலாம். அவை வருமாறு:

| | |
|---|---|
| தேவர் | 11,00000 |
| மனிதர் | 900000 |
| விலங்கு | 1000000 |
| பறவை | 1000000 |
| ஊர்வன | 1500000 |
| நீர்வாழ்வன | 1000000 |
| தாவரம் | 1900000 |
| | 84, 00000 |

திருக்குறள் அறத்துப்பாலில் ஏழாவது அதிகாரம் புதல்வரைப் பெறுதல் என்பதாகும். 'பிறரால் பழிக்கப் படாத நற்குணங்களை உடைய புதல்வரைப் பெற்றவனுக்கு வினைவயத்தால் பிறக்கும் பிறவி ஏழன் கண்ணும் துன்பங் கள் சென்றடையா' என்ற பொருளில்

''எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்'' என்று ஒரு குறள் உள்ளது.

அக்குறளின் விளக்க உரையில் பரிமேலழகர் ஏழு பிறப்புக்கள் யாவை என்று அறிந்து கொள்வதற்காக ஒரு பழம் பாடலை - வெண்பாவை - மேற்கோளாகத் தரு கிறார். அந்த வெண்பா ஏழுபிறப்புக்களை மட்டும் குறிக்க வில்லை; யோனி பேதங்களையும் குறிக்கிறது.

ஊர்வ பதினொன்றும்; ஒன்பது மானுடம்
நீர், பறவை, நாற்கால்ஓர் பப்பத்துச் — சீரிய
பந்தமாம் தேவர் பதினால் அயன்படைத்த
அந்தமில்சீர்த் தாவரம்நா லைந்து.

என்பது அப்பாடல். இந்தப் பாடலின்படி யோனி பேதங் களின் பட்டியல் வருமாறு:

| | |
|---|---|
| ஊர்வன | 11, 00000 |
| மானுடம் | 9, 00000 |
| நீர்வாழ்வன | 10, 00000 |
| பறவை | 10, 00000 |
| விலங்கு(நாற்கால்) | 10, 00000 |
| தேவர் | 14, 00000 |
| தாவரம் | 20, 00000 |
| | 84, 00000 |

முன்னே நாம் குறிப்பிட்ட பட்டியலுக்கும் இதற்கும் வித்தியாசம் இருக்கிறது. தேவர், தாவரம், ஊர்வன என்ற மூன்றன் எண்ணிக்கையிலும் இந்த வேறுபாடு வருகிறது. எப்படியோ மொத்த எண்ணிக்கை 84 லட்சம் யோனி பேதங்களைச் சுட்டுகிறது.

இந்தப் பட்டியலை மக்கள் தொகைக் கணக்கெடுப்புச் செய்கிறார்களே அதைப் போல எண்ணி இவ்வளவு தான் என்று கருதிவிடாதீர்கள். இப்பட்டியல் வகைகளின் கணக்கு என்று புரிந்து கொண்டால் போதுமானது.

ஸ்ரீ மாசிலாமணி தேசிகரின் 84 லட்சம் நிலங்களும் ஏழுபெரும் பிரிப்புக்களில் அடங்குகின்றன. நன்செய், புன் செய், களர் என நிலங்களைப் பிரிப்பதைப் போல மக்கள், தேவர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் என்ற பிரிவுகளாக அவருடைய நிலங்கள் உள்ளன. தடியன் விளை சூரன்விளை என்று நிலங்களுக்குத் தனித்தனியேபெயர் வைப்பது போல இவருடைய நிலங்கள் எண்பத்து நான்கு லட்சம் பெயர்கள் பெறுகின்றன.

நான்கு வகையான தோற்றங்களாலேயே ஏழு பிறப்புக் களும் எண்பத்து நான்கு லட்சம் யோனி பேதங்களும் ஏற்படுகின்றன. இந்த நான்கு தோற்றங்களை அவ்வயல் களின் வாய்க்கால்கள் என்று ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அறிவிக்கிறார்கள். அண்டசம், சுவேதசம், உற்பிசம், சரா யுசம் என்பன அந்த நான்கு தோற்றங்களாகிய வாய்க் கால்கள்.

அண்டசம்: முட்டையிற் பிறப்பன. அவை: அரணை, ஆமை, இப்பி, உடும்பு, ஓணான், தவளை, நண்டு, பல்லி, பறவைகள், பாம்பு, மீன், முதலை முதலியன.

சுவேதசம்: வேர்வையிற் பிறப்பன. இது சிலவகை அசுரப் பிறப்பு.

உற்பிசம்: நிலத்தில் பிறப்பன. புழுபூச்சி வகைகள்.

சராயுசம்: கருப்பையிற் பிறப்பன. மனிதன், விலங்கு முதலியன.

இந்த நான்கு தோற்றங்களும் ஏழுபிறப்புக்களாகிய நிலங்களுக்கு வாய்க்கால்கள்.

ஸ்ரீ மாசிலாமணி தேசிக சுவாமிகளின் ஞானப்பயிர் விளைச்சலுக்கு உரிய நிலங்களை - வாய்க்கால்களைப் பற்றிக் கூறியாயிற்று. இனி இந்த நிலங்களில் என்ன பயிர் செய்வது என்று சுவாமிகள் அருளுகிறார்கள்.

உயிர் என்பதே பயிர் என்று அறிவிக்கிறார்கள்.

ஈரிரு கண்ணுற்று எழுதரம் வகுத்த
ஆறேழு இரட்டி நூறு யிரத்த
செயற்படு செய்களின் உயிர்ப்பயிர் ஏற்றி

[ஈர் இரு - நான்கு; கண்ணுறு - வாய்க்கால்; எழுதரம்- ஏழுபிறப்பு; ஆறு ஏழு இரட்டி - எண்பத்துநான்கு; நூறு யிரம் - லட்சம்; செய் – வயல்].

— சிவ சிவ

---

சிவ சிவ

## சிதம்பரத்தில்

# தேர்த்திருவிழா, திருப்பல்லாண்டு ஓதுதல்

**21—12—80 ஞாயிற்றுக்கிழமை**

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21 ஆவது அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்**

அவர்களின் அருளாணையின் வண்ணம் சிதம்பரத்தில் தேர்த்திருவிழாவில் சேந்தனார் அருளிய திருப்பல்லாண்டு ஓதப்பெறும்.

**திருப்பல்லாண்டு ஓதும் திருமுறைவாணர்கள்:**

1. திரு. M. கனகசபைப் பிள்ளை, சிதம்பரம்.
2. திரு. M. ரெத்தினம் பிள்ளை, சிதம்பரம்.
3. திரு. C. S. குமாரசுவாமி ஓதுவார், கொள்ளிடம்.
4. தேவாரமணி திரு. ஆ. சட்டையப்பன், சிதம்பரம்.

வையத்து வாழ்வீர்காள் பாடியும் ஆடியும் பல்லாண்டு கூறுவீராக!

திருப்பனந்தாள்
21—12—80

அருளாணையின் வண்ணம்
N. சொக்கலிங்கம் செட்டியார்
ஏஜண்டு, ஸ்ரீகாசிமடம், சிதம்பரம்

# 27. ஒளியைத் திருடுவதைப் பற்றி

## தமிழாக்கம் - கோ வன்மீகநாதன்

நன்ருக ஓடுகிறவன் சுவடு விடுவதில்லை.
ஒரு நல்ல சொற்பொழிவு தாக்குதலுக்கான
குற்றங்களைக் கொண்டிராது[1]
நன்ருகக் கணக்குப் போடுகிறவன் புளியங்கொட்டையைப்
பயன் படுத்துவதில்லை,
நன்ருக மூடப்பட்ட கதவு தாழ்ப்பாள்களைப்
பயன்படுத்துவதில்லை; ஆயினும் திறக்கப்படமுடியாது.
நன்ருக போடப்பட்ட முடிச்சு கயிற்றைப்
பயன்படுத்துவதில்லை, ஆயினும் அவிழ்க்கப்படமுடியாது.
ஆகையால் மெய்ஞ்ஞானி மனிதர்களுக்கு உதவிபுரிதலில்
திறமை சாலியாக இருக்கிருன்;
அக்காரணத்தால் தள்ளப்பட்ட (பயனில்லாத) ஆள்
யாருமில்லை.
அவன் பொருள்களைச் சேமிப்பதில் திறமைசாலி;
அக்காரணத்தால் யாதும் தள்ளப்படுவதில்லை[2]
— இதற்குதான் ஒளியைத் திருடுவது[3] என்று பெயர்.
ஆகையால் ஒரு நல்லமனிதன் கெட்டமனிதர்களுக்குக் குரு.
கெட்டமனிதன் நல்ல மனிதர்களுக்குப் படிப்பினை.[4]
எவனொருவன் தன் குருவை மதிக்கவில்லையோ,
தன் பாடத்தை விரும்ப வில்லையோ
அவன் மிகவும் கெட்டுப் போனவன்,
கற்றவனுயிருந்தும் கூட.
— இத்தகையது நுண்ணிய இரகசியம்.

---

1. ஒப்பிடுக: சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை வெல்லுஞ்சொல் இன்மைஅறிந்து - குறள் 645.
2. மெய்ஞ்ஞானி ஒவ்வொருவனையும்அவனுடைய திறமைக்குத் தக்கவாறு பயன்படுத்துகிருன்.
3. படையெடுப்பு, இரவில் தாக்குதல், உட்புகுந்து அழித்தல் முதலிய பற்பல சூழ்ச்சியால் காரியத்தைச் சாதித்தல், மிகச் சிறந்த பயனைப்பெறுமாறு இயற்கையின் விதிகளை அறிந்து வைத்திருப்பதைத் தந்திரமாகப் பயன்படுத்துதல் என்பது பொருள்.
4. லாபமடைதற்கு ஏதுவான மூலப்பொருள், சாதனங்கள், பிறர் உதவி, உதாரணமாக ஒரு படிப்பினை - இவற்றை 'உறுப்பு' என்ருர் திருவள்ளுவர். 79 ஆம் குறள் காண்க:
''புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு''.

## வேதம் ஓதும் போட்டி

கி. பி. 971-ல் பாபநாசத்திற்குப் பக்கத்தில் உள்ள 'கோயில் தேவராயன் பேட்டை' என்னும் இடத்தில் வேதம் ஓதுவதற்கு ஒரு போட்டியை நடத்த ஒடுவன் ஏற்பாடு செய்தான். இப்போட்டியை நடத்த 20 கடுங்காசுகளை முதலாக வைத்தான். இதற்குக் கிடைக்கும் ஆண்டுவருமானமான 3 காசுவட்டியே பரிசுத்தொகை. போட்டியில் கலந்து கொள்பவர் 'ஜைமினிய சாமவேதத்தை' ஓதவேண்டும். ஒவ்வொருவருடமும் மார்கழித் திருவாதிரையில் நடராசப்பெருமானுக்குத் திருமஞ்சனமானவுடன் இப்போட்டி நிகழ்ந்தது. ஒருமுறை முதல் பரிசு பெற்றவர் திரும்பவும் கலந்து கொள்ளக்கூடாது என்பது சுந்தரசோழன் காலத்தைச் சேர்ந்த கோயில் தேவராயன் பேட்டைக் கல்வெட்டில் கண்ட போட்டிவிதிகளாகும்.

வித்துவான். வே. மகாதேவன். எம். ஏ

## வீரட்டானம்

இறைவன் வீரச்செயல்கள் நிகழ்த்திய தலத்தினை வீரட்டானம் (வீரம்+ஸ்தானம்) என்பர். எட்டு தலங்களில் நிகழ்ந்தமையால் (அஷ்ட+ஸ்தானம்) அட்டானம் எனவும் கூறுவர்.

| | வீரச்செயலகள் | | தலங்கள் |
|---|---|---|---|
| 1. | பிரமன் தலை அரிந்தது | ... | திருக்கண்டியூர் |
| 2. | அந்தகாசுரனை நலித்தது | ... | திருக்கோவலூர் |
| 3. | திரிபுரம் எரித்தது | ... | திருவதிகை |
| 4. | தக்கனைக் கடிந்தது | ... | திருப்பறியலூர் |
| 5. | சலந்தராசுரனைக் கொன்றது | ... | திருவிற்குடி |
| 6. | யானையின் தோல் உரித்தது | ... | திருவழுவூர் |
| 7. | காமனைக் காய்ந்தது | ... | திருக்குறுக்கை |
| 8. | எமனை எற்றியது | ... | திருக்கடவூர் |

"பூமன்சிரம் கண்டி; அந்தகன்கோவல்; புரம்அதிகை;
மாமன் பறியல்; சலந்தரன்.விற்குடி; மாவழுவூர்;
காமன் குறுக்கை; இயமன் கடவூர்; இக்காசினியில்
பூமன்னு கொன்றையும் திங்களும் சூடிதன் சேவகமே.

(பூமன் - பிரமன்; மாமன் – தக்கன், மா - யானை (கஜாசுரன்)

— கெ. கி. சத்தியநாராயணன்,
கோயம்புத்தூர்.

# பேரின்ப வேட்கை

கி. வா. ஜகந்நாதன்

''என்னை யமன் கொண்டு செல்லாமல் அருள் புரிந்து பேரின்பப் பெருவாழ்வை வழங்க வேண்டும்'' என்று தியாகேசப் பெருமானிடம் விண்ணப்பம் செய்து கொள்கிறார் குமரகுருபர முனிவர். முதலில் தியாகேசப் பெருமான் எழுந்தருளியிருக்கும் திருவாரூரின் பெருமையை விரித்துரைத்து, பிறகு யமன் உயிரைக் கொண்டு செல்லும் செயலைச் சொல்லி, தாம் அவன் கைட்படாமல் பேரின்பம் அடையவேண்டும் என்று வேண்டுகிறார்.

### திருவாரூரின் பெருமை

திருவாரூரில் பலவகையான மாடங்கள்இருக்கின்றன. வயிரம், நீலம், மாணிக்கம் என்ற இரத்தினங்கள் பதித்துச் செய்த மாளிகைகள் அவை. அந்த மூன்று வகை மாளிகைகளின் ஒளியும் வீதிகளில் வீசுகின்றன. வயிர மாளிகையின் ஒளி வெண்மையாகவும், நீல மணிபதித்த மாளிகையின் ஒளி நீலமாகவும், மாணிக்க மாளிகையின் ஒளி சிவப்பாகவும் இருக்கின்றன. இந்த மூன்றுவகை ஒளியும் சேர்ந்து வீசும் போது வெண்ணிறமுள்ள கங்கையும், நீல நிறமுள்ள யமுனையும்: செந்நிறமுள்ள வாணி நதியும்சேர்ந்த திரிவேணி சங்கமத்தைப் போல வீதி தோற்றம் அளிக்கிறது.

அந்த மாடங்களில் பெண்கள் வாழ்கிறார்கள். தனங்களைச்சுமந்து அந்தப் பாரத்தால் உள் வாங்கிய இடைகளையும், ஒன்றோடு ஒன்று ஒட்டாமல் புரிந்து விளங்கும் கூந்தலையும் உடைய பெண்கள் தங்கும் அந்த மாடங்கள் பொன்னால் சுவரெழுப்பி இரத்தினங்கள் பதிக்கப் பெற்றிருக்கின்றன மிகவும் உயரமாக இருக்கின்றன.

வருமுலை சுமந்து வாங்கிய நுசுப்பின்
புரிகுழல் மடந்தையர் பொன்நெடு
மாடத்து.

அந்தமாடங்களிலே பதிந்துள்ள ஒள்ளிய வெண்கதிரை வீசும் வயிரமும், குளிர்ச்சியான கதிரை வீசும் நீலமணியும், சிவப்பான ஒளியைப் பரப்பும் மாணிக்கத் தொகுதியும் படர்ந்திருக்கின்ற பெரிய இருட்டை ஓட்டிக் கண்ணுக்கு இனிய இளங்கதிர்களை வீசுகின்றன.

ஒண்கதிர் வயிரமும் தண்கதிர் நீலமும்
சேயொளிபரப்பும் செம்மணிக் குழாமும்
மா இருள் துரந்து மழகதிர் எறிப்ப.

அவ்வாறு மூன்று நிறமுடைய இரத்தினங்களும் மூன்று வேறு வண்ண முடைய கதிர்களை வீச ஆகாயகங்கை முதலிய மேன்மை பெற்ற நதிகள் மூன்றும், செல்வத்தையுடைய நீண்ட வீதியில் போவது போலத் தோன்றுகின்றது.

சுரநதி முதல வரநதி மூன்றும்
திருவம் நீள் மறுகில் செல்வது கடுப்ப.

இவ்வாறு பலமணிகளின் விளக்கமான ஒளி பொங்கிப் பரவும் ஊர் திருவாரூர். மிகச் சிறந்த தமிழுக்கு இடமாக விளங்குவது அது.

ஒள்ளொளி ததும்பும் ஒண்தமிழ்க்
கமலை.

அந்தத்திருவாரூரில் தியாகேசன் எழுந்தருளியிருக்கிறான். தெளிந்த அமுதைத்துணிக்கும் சந்திரனையே தலையில் அணியும் அழகிய கண்ணியாகக் கொண்டிருப்பவன் அப்பெருமான். அவன் தீயின் வண்ணத்தை உடையவன். அவனை விளித்து "தீ வண்ணம் உடைய தெய்வநாயகனே, உன்னுடைய திருவடியை எப்படி வணங்க வேண்டுமோ அந்த முறைப்படி வணங்குவோம்" என்று சொல்லுகிறார்.

தேன் அமுது உறைக்கும் திங்கள்அம்
கண்ணித்
தீ நிறக் கடவுள் ! நின் கால்முறை
வணங்குதும்.

## யமன் செயல்

இதற்குமேல் யமன் உயிரைக் கொண்டு போகும் செயலைச் சொல்ல வருகிறார். அவனைத் தூண்டில் போட்டு மீனைப்பிடிக்கும் மீனவனாக உருவகம் செய்கிறார்.

உயிரைக் கொண்டு போகும் கொடுமையான தொழிலைச் செய்யும் வலைஞன் அவன். அவனுக்குக் கூற்று என்று பெயர்.

கூற்று எனப் பெயரிய
கொடும்தொழில் நுளையன்.

இந்த உடம்பு உப்பு நீர்க்கேணியைப் போல இருக்கிறது. எதற்கும் உதவாதது. இது எப்போது அழியுமோ தெரியாது. நெடுங்காலம் நிற்கும் வன்மை இதற்கு இல்லை.

ஊற்றம் இல் யாக்கை
உவர்நீர்க் கேணி

இந்தக் கேணியில் அறிவு என்னும் தலையையுடைய உயிராகிய மீன் வாழ்கிறது. அதைத்துன புறுத்திப் பிடிப்பதற்காகக் காத்திருக்கிறான் யமனாகிய வலைஞன்.

புலத்தலை உயிர்மீன்
அலைத்தனன் பிடிப்ப.

இந்த உடம்பில் கபம், வாயு, பித்தம், என்ற மூன்றும் இருக்கின்றனஅவையிருக்கவேண்டிய அளவு மாறினால் உடல் நோய்வாய்ப் படும். "மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர், வளி

முதலா எண்ணிய மூன்று'' (441) என்பது திருக்குறள். அந்த மூன்றையும் மூன்று தூண்டில் முள்ளாக அமைத்து வைத்திருக்கிறுனும். தூண்டிலில் மிதப்பு இருக்கும். தூண்டில்காரன் அந்த மிதப்பின் மேல் கவனம் வைத்திருப்பான்.

''தூண்டில் காரனுக்கு மிதப்பின்மேல் கண்'' என்பது பழமொழி. மிதப்பு அமிழும் போது சட்டென்று தூண்டிலை வாங்கி மீனைத் தூண்டில் முள்ளிலிருந்து எடுத்துக் கொள்வான்.

இங்கே கப வாத பித்தம் என்ற துலை போன்ற மூன்று தூண்டில் களைத் தூண்டிவைத்திருக்கும் யமன், அவ்விடத்தில் வாழ்நாள் என்னும் மிதப்பு எப்போது அமிழப் போகிறது என்று காத்திருக்கிறுன். அது அமிழ்ந்தவுடனே சிறிதும் தாமதம் செய்யாமல் எடுத்து உண்ண வேண்டும் என்ற எண்ணத்தோடு பல்லை மென்று கொண்டிருக்கிறுன். பசித்தவன் உணவுக்காகக் காத்திருந்து பல்லை மென்றுகொண்டிருப்பது இயல்பு. அப்படி யமன் இருக்கிறுன்.

ஐவளி பித்துளன
அமைத்துவைத் திருந்த
முத்துலைத் தூண்டில்
தூண்டி அத்தலை
வாழ்நாள் மிதப்பு
நோக்கித் தாழாது
அயிறலைத் தொடங்கி
எயிறுஅலைத் திருத்தலின்.

பரமானந்த வாழ்வு

அப்படிக் காத்திருக்கும் யமனுடைய எண்ணத்தில் மண்ணைப் போட வேண்டும்! என்று சொல்கிறுர் ஆசிரியர்.

''உயிர் அவன் கைக்கு அகப்படாமல் போனுல் அவன், யாராலும் நீக்க முடியாத என் முயற்சி பிழைபட்டு ஒழிந்ததே!'' என்று முதலில் வெட்கம் அடைவான்; பிறகு, 'இப்படியும் ஓர் உயிர் இருக்கிறதே. இதுவியப்பானது' என்று ஆச்சரியம் அடைவான்.

தள்ளா முயற்சி
தவறுபட்டு ஒழிந்தன
வெள்குறீஇ மற்றுஅவன்
விம்மிதன் ஆக.

''அவ்வாறு யமன் வெட்கமும் வியப்பும் அடையும் படியாக நீ அருளவேண்டும்.'' என்றுவேண்டுகிறுர். என்ன செய்யவேண்டும்.

மீன் எப்போதும் தண்ணீரில் வாழும் இயல்புடையது, உப்புக் கேணியில் வாழும் மீனைப் பெரிய கடலில் மனம் போல நீந்தி உலாவி இன்புறும்படி செய்ய வேண்டுமாம்.

தியாகேசனுடைய அருளாகிய பெரிய கடலில் அந்த அரிய உயிராகியமீன்பாய்ந்துபுகவேண்டும்; கர்ப்பமாகிய குழியில் நீந்திப்பாய வேண்டும்.

அந்தக்கடலில் இன்னதென்று உணர்த்தமுடியாத பரமானந்தம் என்னும் அலைகள் வீசுகின்றன.

அந்த அலையோடு இந்த உயிராகிய மீன் உலாவ வேண்டும். அப்போது கிடைப்பதற்கரிய பெருமை உணர்வு உயிருக்கு உண்டாகும்.

அருட்பெருங் கடலில்
அவ்வாருயிர் மீனம்
கருக்குழி கழியம்
பாய்ந்து, தெரிப்பரும்
பரமா னந்தத்
திரையொடும் உலாவி
எய்தரும் பெருமிதம் எய்த.

''இத்தகைய பேரின்ப வாழ்வை அடைய, எம்பெருமானே, நின் கடைக்கண் பார்வையை அருள வேண்டும். இது தான் எம் விண்ணப்பம்'' என்று சொல்லி முடிக்கிறார் முனிவர்.

ஐய, நின் கடைக்கண்
அருளுதி எனவே.

'யமனுடைய கையில் அகப்படாமல் உன்னுடைய அருளுக்கு ஆளாகி, பேரின்பப் பெருவாழ்வைப் பெற வேண்டும்' என்பதே இதன் கருத்து.

வருமுலை சுமந்து
வாங்கிய நுசுப்பின்
புரிகுழல் மடந்தையர்
பொன்நெடு மாடத்து
ஒண்கதிர் வயிரமும்
தண்கதிர் நீலமும்
சேயொளி பரப்பும்
செம்மணிக் குழாமும்
மாஇருள் துரந்து
மழகதிர் எறிப்பச் (5)
சுரநதி முதல
வரநதி மூன்றும்
திருவம் நீள் மறுகில்
செல்வது கடுப்ப,
ஒள்ஒளி ததும்பும்
ஒண்தமிழ்க் கமலைத்
தெள்அமுது உறைக்கும்
திங்கள்அம் கண்ணித்
தீநிறக் கடவுள், நின்
கால்முறை வணங்குதும்!
கூற்றுஎனப் பெயரிய
கொடுந்தொழில் நுளையன்
ஊற்றம்இல் யாக்கை
உவர்நீர்க் கேணிப்
புலத்தலை உயிர்மீன்
அலைத்தனன் பிடிப்ப,
ஐவளி பித்துஎன
அமைத்துவைத் திருந்த
முத்துலைத் தூண்டில்
தூண்டி, அத்தலை (15)
வாழ்நாள் மிதிப்பு
நோக்கித் தாழாது
அயிரலைத் தொடங்கி
எயிறுஅலைத் திருத்தலின்,
தள்ளா முயற்சி
தவறுபட்டு ஒழிந்தென
வெள்குறீஇ, மற்று அவன்
விம்மிதன் ஆக,
அருட்பெருங் கடலின்அவ்
வாருயில் மீனம் (20)
கருக்குழி கழியப்
பாய்ந்து, தெரிப்படும்
பரமா னந்தத்
திரையொடும் உலாவி
எய்தரும் பெருமிதம் எய்த,
ஐய, நின் கடைக்கண்
அருளுதி எனவே.

வளர்ந்து வரும் நகில்களைச் சுமந்து அந்தப் பாரத்தினால் உள்ளே சுருங்கிய இடையையும், புரிந்த கூந்தலையும் உடைய பெண்கள் வாழும் பொன்னால் அமைந்த

மாடங்களில் உள்ள, விளக்கத் தையுடைய கதிரைப் பெற்ற வயிரமும், குளிர்ச்சியைப் பெற்ற கதிர்களையுடைய நீலமணியும், செம்மையான ஒளியைப் பரப்பும் மாணிக்கத் தொகுதியும் பெரிய இருளை ஒட்டி, கண்ணுக் கினிய இளங்கதிர்களை வீச, அந்த மூன்றும் ஒன்றி வீசும் காட்சி கங்கை முதலிய மேன்மையான நதிகள் மூன்றும் செல்வமுடைய நீண்ட வீதியில் ஓடுவதை ஒத்து விளங்க, மிக்க ஒளி பொங்கும் விளக்கமான தமிழையுடைய திருவாரூரில் நித்திய வாசம் செய் பவனும், தெளிவான அமுதத்தை துளிசகும் சந்திரனாகிய அழகிய கண்ணியையும் தீப்போன்ற நிறத் தையும் உடையக் கடவுளுமாகிய தியாகப் பெருமான்,

கூற்று என்று பெயர் பெற்ற கொடுமையாகிய செயலையுடைய வலைஞன், வலிமையில்லாத உடம் பாகிய உப்பு நீர்க் கேணியில், அறிவாகிய தலையையுடைய உயி ராகிய மீனைத் துன்புறுத்திப் பிடிப்பதற்காக, கபம், வாயு, பித்தம் என்னும் பெயரோடு பொருத்தி வைத்திருக்கும் மூன்று துலைகளையுடைய தூண்டிலைப் போட்டு, அவ்விடத்தில் வாழ் நாள் என்னும் மிதப்பைப்பார்த்து தாமதம் செய்யாமல் உண்ணு தலைத் தொடங்கித் தன்பல்லை மென்று கொண்டிருப்பதனால், தன்னுடைய விலக்குவதற்கரிய செயல் தவறுபட்டு வீணாயிற்று என்று அறிந்து வெட்கம் அடைந்து வியப்புடையவன் ஆகும்படி, அந்த அரிய உயிரா கிய மீன் கருப்பமென்றும் குழி யிலே படாமல் கடந்து நின் னுடைய அருள் என்னும் பெரிய கடலில் பாய்ந்து. உணர்த்து வதற்கரிய பரமானந்தம்என்னும் அலையோடு உலாவி, எய்துவதற் கரிய பெருமையுணர்வை அடை யும் படி, ஐயனே, நின்னுடைய கடைக்கண் பார்வையை அருள் வாயாக என்று, நின்னுடைய திருவடிகளை முறைபடி வணங்கு வோம்.

வருமுலை-பருவத்தில்தோன்றும் நகில். சுமந்து என்பதனால் அதன் பெருமை உணர்த்தப்பட்டது. வாங்கிய-உள் வாங்கிச் சிறுத்த. நுசுப்பின்-இடையையும்;புரிகுழல் -சேராமல் தனித்தனியே உள்ள கூந்தல், சேர்த்தால் சடைபோல ஆகிவிடும். மடந்தையர் என்பது பருவத்தைக்குறிக்காமல் பெண் கள் என்னும் துணையாய் நின்றது, பொன்:பொற்றகடுகள்வேய்ந்தது நெடுமை — உயரம், செம்மணி மாணிக்கம்; சேயொளி என்று அடைகொடுத்ததனால்செம்மணி. மணி என்னும்துணையாய்நின்றது. குழாம் - தொகுதி. மா இருள்-மா டங்களின் நெருக்கத்தால் உண் டானயிருட்டு. துரந்து-போக்கி, மழகதிர்-கண்கூசாமல்வீசும்இளங் கதிர். எறிப்ப-வீச. சுரநதி-கங்கை; தேவருலகில் தோன்றி வருவதால் சுரநதி என்றால் மூன்று கங்கை, யமுனை சரசுவதி என்னும் மூன்று. திருவம்-செல்வம். மறுகு - வீதி, கடுப்ப - ஒப்ப, கதிர் எறிப்பது, செல்வதை ஒத்தது.

ஒள் ஒளி - மிக்க ஒளி. ததும்பும் - எல்லையின்றிப் பொங்கும். ஒண் தமிழ் - பலரும் அறியும் விளக்கத்தை உடைய தமிழ். தமிழை உடைய கயலே; என்றது தமிழ்ப் பாடல்களால் பாராட்டப் பெறுவதைச் சொன்னபடி; தமிழ்ப் புலவர்கள் வாழும் கயலே என்றும் கொள்ளலாம். உறைக்கும்-துளிக்கும். கண்ணி- தலையில் அணியும் மாலை இறைவன் தீயைப் போன்ற செந்நிறம்உடையவன். காலே முறையாக வணங்குவோம்; பன்மை பல அடியார்களையும் உளப்படுத்திச் சொன்னபடி; பெருமிதத்தால் தம்மையே பன்மையாகக் குறித்தது என்றும் கொள்ளலாம்.

பெயரிய-பெயரை உடைய. கொடுந் தொழில் என்றது உயிரைக் கொள்ளும் தொழிலே; ''கொடுந்தொழிலாளன் கொன்றனன் குவிப்ப'' என்பது மணிமேகலை. நுளையன்-வலையன். ஊற்றம்-வலிமை. உவர் நீர்க் கேணி-உப்பு நீரையுடைய கடற்கரைக்கிணறு.

கேணிப் புலத்து, அலை உயிர் மீன் என்று பிரித்து கேணியாகிய இடத்தில் அலையும் உயிராகிய மீன் என்றும் பொருள் கொள்ளலாம். அலைத்தனன் - வருத்தி; முற்றெச்சம். ஐ-சிலேட்டுமம். வளி-வாயு பித்து-பித்தம். துலை-ஏற்றம்; ஏற்றத்தைப் போல நீரில் தோய்ந்து சாய்ந்திருத்தலின் இவ்வாறு சொன்னார், தூண்டில்-தூண்டிலாகிய கோல். தூண்டி-செலுத்தி. அத்தலை - அவ்விடத்தில் வாழ்நாளாகிய மிதப்பு, வாழ்நாள் முடிந்தால் கூற்றுவன் வருவான். மிதப்பு மறைந்தால் வலையன் தூண்டிலை எடுத்து மீனைப் பிடிப்பான். தாழாது-தாமதம் செய்யாமல். அயிறல்-அயிலுதல். மீன் பிடிபடும் என்ற உறுதியால பல்லை மெல்லுவான். எயிறு, அலைத்திருத்தலின-பல்லை மென்று கொண்டிருப்பதால். தள்ளா முயற்சி - யாராலும் தவிர்க்கப்படாத செயல்; ''மாற்றரும் கூற்றம்'' என்பது தொல்காப்பியம்; ஒழிந்தென-ஒழிந்ததென; விகாரம்; வெள்கு உற்று - வெட்கம் அடைந்து; தன் செயல் இதுகாறும் பிழையாமல் இருந்தவன் இப்போது பிழைத்தலால் வெட்கம்அடைவான், மற்று;அசை தன் செயல் பிழைத்தலின் வெட்கமும் இது காறும் நடவாதது நடந்ததால் வியப்பும்அடைவான் விம்மிதம் - வியப்பு; விச்மிதம் என்ற வட சொல்லின் திரிபு.

அருள் எல்லையிறந்ததாதலின் பெருங்கடல் என்றார். கடுக்குழி கடுப்பமாகிய குழி. கழிய-நீங்க. தெரிப்படும்-இந்த நிலை கிடைத்ததே என்ற பெருமை உணர்வு. ஐய-ஐயனே; அழகிய என்றும் பொருள் கொள்ளலாம். கடைக்கண்-கடைக்கண் பார்வை; ஆகுபெயர். எனவே வணங்குதும்.

உப்புக்கிணற்றில் வாழும் மீன் தூண்டில் போடும் வலையனுக்கு அகப்படாமல் குழிகளைத் தாண்டிப் பெரியகடல் புகுந்து உலாவிப் பெருமிதத்தை அடையும் என்று சொன்னார்.

திருவாரூர் நான்மணிமாலையில் வரும் 13-ஆவது பாடல் இது.

# "சித்தாந்த சாத்திரங்கள்"

மு. அருணாசலம்

## வேதாந்தமும் ஆகமாந்தமும்

மேலே கூறிய உபநிடதங்கள் கூறிய தத்துவப் பொருள் வேதாந்தம்; வேதத்தின் முடிவான கருத்து என்பது இதன் பொருள். உபநிடதம் எல்லோருக்கும் உடன்பாடெனவே, வேதாந்தமும் ஹிந்து மதத்தின் எல்லாப் பிரிவுகளுக்கும் உடன்பாடு. சங்கர மதமும் வேதாந்தம், இராமானுச மதமும் வேதாந்தம், சைவர் மதமும் வேதாந்தமே. வேதாந்தம் சுட்டுவது அத்வைதம், சங்கரரும் அத்வைதம், இராமாநுசரும் அத்வைதம், சைவரும் அத்வைதம். வேறுபாடெல்லாம் அத்வைதம் என்ற சொல்லுக்குச் செய்யும் பொருளில். சங்கரர் சொல்வது கேவல அதி அத்வைதிகமாகிய ரகம், இராமாநுசர் சொல்லுவது விசிஷ்டமுடைய அத்வைதம். சைவர் சொல்வது சுத்த அத்வைதம்; (இது ஏகமல்ல). இத்தத்துவ ஆராய்ச்சியில் இங்கு இறங்க இயலாது.

சைவர் ஆகமத்தைக் கடைப்பிடிப்பதால் அவர்கள் கோட்பாடு ஆகமாந்தம் என்று சொல்லப்படுகிறது; ஆகமத்தின் முடிவான பொருள் இதுவே; சித்தாந்தம் என்றும்சொல்வர். எனவே சித்தாந்தப் பொருளைச் சொல்லும் சாத்திரம் சித்தாந்த சாத்திரம்.

தமிழில் சித்தாந்த சாத்திரங்கள், அவற்றைச் செய்தோர், அவை தோன்றிய வரலாறு, அவை கூறும் பொருள், அவற்றுக்கு எழுந்த உரைகள் வரலாறு, நூல்களின் (அச்சு வரலாறு) அவற்றைத் தழுவி எழுந்த பிற முக்கிய சாத்திரங்கள் என்பன மிகவும் விரிந்த பொருள், அவற்றில் சுவாரசியமான பகுதியை இங்குச் சுருக்கிச் சொல்வோம்.

## சித்தாந்த சாத்திரங்கள்

சைவத் திருமுறைகள் பன்னிரண்டு என்பது போலவே, சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு என்பது பழையதோர் வழக்கு. திருமுறைகள் வகுக்கப் பெற்ற செய்தி திருமுறைகண்ட புராணத்துள் கூறப்பட்டிருக்கிறது; நம்பியாண்டார் நம்பிகளால் பதினொரு திருமுறைகள் வகுக்கப் பெற்றன; சேக்கிழார் சுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டர்புராணம் பன்னிரண்டாந் திருமுறையாகச் சேர்க்கப் பெற்றது. ஆனால் சித்தாந்த சாத்திரங்கள் சம்பந்தமாக இத்தகைய வரலாறு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

சைவ சித்தாந்த சந்தானுசாரியர், சமயாச்சாரியரைப் போல நால்வர் என்பது மரபு. இந்நால்வரைக்குறித்த செய்திகள் இவர்கள் மாணுக்கர் பரம்பரை வழிவந்த சைவ மடங்களில் பேணி நினைவு கூரப்பட்டு வருகின்றன. அவர்களுடைய ஆசாரிய பரம்பரையிலும் முறையாகச் சொல்லப்பட்டு வருகின்றன. அந்நால்வராவார் - மெய்கண்டார், அவர் மாணுக்கர் அருள்நந்தி சிவாசாரியர், அவர் மாணுக்கர் மறைஞானசம்பந்தர், அவர் மாணுக்கர் உமாபதி சிவா சாரியர் என்போர். இந்நால்வரைக் குறித்த செய்திகள் எந்தப் பண்டை நூலிலும் காணப்படவில்லை. உமாபதி சிவம் தாம்செய்த சிவப்பிரகாசப் பாயிரத்தில் தம் முன் வந்த ஆசாரியர் மூவருக்கும் ஒருபாடலில் வணக்கம் கூறி, தம் குருவாகிய மறைஞானசம்பந்த ருக்குப் பின்னும் தனியொருபாடலில் வணக்கம் கூறியிருக்கிறுர். பிற செய்திகளுக்கெல்லாம் ஆதாரம் மரபு வழிச்செய்திகளே.

## சந்தானுசாரிய புராண சங்கிரகம்

இந்த நிலையில் அன்று கூறியப்படி இந்த சந்தானுசாரியர் நால்வர் வரலாற்றைச் சுருக்கித் திருவாரூர்ச் சாமிநாத தேசிகர் என்பவர் 126 பாடல் கொண்ட சிறு புராண நூலாகப் பாடி அரங்கேற்றி அச்சிட்டார். இது சங்கிரகம் என்று சொல்லப்பட்டதற்குக் காரணம், இது சுருக்கமான வரலாறு என்பதே. இதனுல் விரிவான பெருநூல் ஒன்று இருந்தது என்பது பொருளல்ல.

தேசிகர் அகத்தியர் கோத்திரத்தில் சுப்பிரமணிய தேசிகர் என்பவர் புதல்வராய் பிறந்து வித்துவான் தியாகராயச் செட்டியாரிடம் திரிசிராப்பள்ளியில் தமிழ்க் கல்வி கற்றுத் தேர்ந்தார். சீரங்கத்தில் தமிழாசிரியராக வேலை பார்த்தார். பலமுறை காசியாத்திரை செய்து வந்து இறுதியில் காசியிலேயே முத்தியடையும் பேறுபெற்றுர்.

(வளரும்)



# விடையரங்கம்

வினா

திருஞானசம்பந்த சுவாமிகள், நின்ற சீர் நெடுமாறன் உத்தரவைத் தடுக்காதது ஏன்?

சேக்கிழாரின் காரணத்தோடு சிந்தனையை நிறுத்தினால் போதுமா?

தீவைப்புக்கு இவ்வளவு தண்டனையா?

விடை:

—சி. அருணைவடிவேல் முதலியார்

''நெடுமாறன் உத்தரவு'' என்றவர் உத்தரவு என்ன என்பதைக் குறிப்பிடாமலே ஐயங்களை எழுப்பியுள்ளார். அந்த ஐயங்களைக் கொண்டே அவனது உத்தரவு இன்னது என்பதை நாம் வெளிப்படையாகச் சொல்லி விளக்கம் தரவேண்டும் போலும்.

அவ்வுத்தரவு சமணர்களைக் கழுவேற்றும்படி இட்ட உத்தரவாகத்தான் நாம் கொள்ள வேண்டியுள்ளது. இதை அவர் தம் வாயால் கூறவிரும்பவில்லை போலும்!

"அந்த உத்தரவை ஞானசம்பந்தர் தடுக்காதிருந்ததற்குச் சேக்கிழார் கூறும் காரணத்தோடு நாம் நின்று விடலாமா'' என்று கேட்கின்றார். அதனால், சேக்கிழார் கூறும் காரணத்தையும் அவர் ஓரளவில் உடன்படுகிறார் என்பது தெளிவு.

சேக்கிழாரை நம்மினும் பெரியவராக, ஆராய்ச்சி மிக்கவராக நாம் கருதினால் அவர் கூறிய காரணத்தோடு நாம் நின்று விடத்தான்வேண்டும். 'அவர் கூறிய காரணம் எவ்வாறு இந்த வினாவிற்கு விடையாகின்றது' என்று வேண்டுமானால் நாம் சிறிது சிந்திக்கலாம். அந்தச் சிந்தனையளவில் சிலவற்றைக்கூறலாம்.

நீதிபதி ஒருவர் தீர்ப்புவழங்கும் பொழுது தமது தீர்ப்புக்குக் காரணத்தை விளங்கக் கூறியே வழங்குவார். அதுபோல, மாறனும் 'சமணரைக்கொன்னுனைக்கழுவில் ஏற்றி முறை செய்க' என அமைச்சர்க்கு உத்தரவிடும் பொழுது அதற்குரிய காரணத்தையும் அவன் தெளிவுறக் கூறியே உத்தரவிட்டான். அவன் முதலாவதாகக் கூறிய காரணம் சமணர்கள் வாதில் தோற்றது அன்று.

''இச்சமணர் தாங்கள்—முன்னமே பிள்ளையார் பால் அனுசிதம் முற்றச் செய்தார்'' என்பதே அவர் கூறிய சிறப்பான, தலையாய காரணம்.

அனுசிதம் - உசிதம் இன்மை. உசிதம்—பொருத்தம்.

ஒருவர் மற்றவருக்குக் குற்றம் செய்யும் பொழுது அக்குற்றம் மிகப்பெரிதாவதும், சிறிதாவதும் செய்யப்பட்டவரது தகுதியை முதன்மையாகவும், அதனையடுத்து செய்தவரது தகுதியையும் பொறுத்தேயாகும்.

இங்கு, செய்யப்பட்டவரது தகுதி ''பிள்ளையார் பால்'' என்ற ஒரு சொல்லில் அடக்கிக் கூறப் பட்டது.

''பால்நல்வாய் ஒரு பாலன் வெளி நாட்டிலிருந்து வந்து தன் சுற்றத் தோடு தங்கியிடுக்கும் விடுதியை, அந்த நாட்டுச் சமயக் குடுமார் கள்-அரசனைஆட்கொள்ளும் குடு மார்கள் பலர் ஒடுங்கு திரண்டு நள்ளிரவில் திட்டம் இட்டுத் தீக் கொளுவினார்கள், இஃது எத்துணைக் கொடுஞ்செயல்' என் பதை உலகியல் நோக்கிலும்,

'ஞானியராய் உள்ள ஒரு வரைக் கொல்லுதல் பொது மக்கள் ஆயிரவரைக் கொல்லு தற்குச் சமம்' என்னும் சமய நெறிப்படி பிள்ளையார் ஞானத்தின் திருவுருவாய், நான்மறையின் தனித் துணையாய் நிற்க, அவரைத் தலை வராகக் கொண்டு ஒழுகும் அடி யார்கள் பலரும் அன்ன நிலையி னராய்உடன்இடுக்க, அத்துணைப் பேருக்கும் சமணக் குடுமார்கள் கொலை சூழ்ந்தனர் என்பதைச் சமய நோக்கிலும் அரசன் தனது உத்தரவிற்குச்சிறந்த காரணமாக எடுத்துக் கூறினன்.

'கொலை சூழ்ந்தவர் பொது வாகக் கொல்லா வாதிகள் மட்டும் அல்லர், அவ்விரத நெறிக்குத் தலைவர்கள் என்பதையும் குறிப் பிட்டான்' என்றே கொள்ளுதல் வேண்டும்.

ஞானசம்பந்தரோடு சென்றவர் பதினாறுயிரம் திருக்கூட்டத்தவர் என்பது மரபு. 'கழுவேற்றுப்பட்ட சமணர்கள் எண்ணாயிரவர்' என்பது சொல்லப்படுகின்றது. ''தீவைப் புக்கு இவ்வளவு பெரிய தண்ட னையா'' எனக்கேட்கின்ற அன்பர் இதைச் சிந்தித்தல் வேண்டும்.

'கொலைக்குத் திட்டம் இடப் பட்டாலும், அது நிறைவேற வில்லையே' என்று கேட்கலாம். அக்கால முறையில் இந்தக் கேள்விக்கு இடம் இல்லை.

பசுக் கன்றைக் கொன்ற -அறியாது கொன்ற இளஞ்சிறுவனுக்குக் கொலைத் தண்டனை கொடுத்த காலம் அது. சமணர் இட்ட திட்டம் நிறைவேறிற்று, ஆனால் பயன் தான் விளையவில்லை. அதை இங்கு நாம்கணக்கில்கொள்ளுதற்கில்லை. இதனால், அரசன் முறை செய்த லாகிய தனது கடமையைத்தான் செய்ய முற்பட்டானே ஒழிய, முறையல்லாத செயலைச் செய்ய முற்படவில்லை; ஆகவே, ஞானசம் பந்தர் அவனைத் தடுக்க வேண்டிய நிலைஏற்படவில்லைஎன்பது விளங்கு கின்றது. இவற்றைச் சேக்கிழார் கூறும்பொழுது,

''கொன்னுனைக் கழுவில் ஏற்றி முறை செய்க'' என, 'முறை செய்யும்படியே-நீதியைச் செயற்படுத்துப்படியே' அரசன் உத்தவிட்டான். என்றும்,

''ஞான புங்கவர் (சம்பந்தர்) அதனைக்கேட்டும் மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடா திருந்த வேளை'' என, 'அரசன் முறை செய்ய நினைக்கும் பொழுது அதனைத் தடுக்க வேண்டுவதில்லை என்றே ஞானசம்பந்தர் வாளா இருந்தார்' என்றும் கூறினர்.

இவ்விடத்தில் சேக்கிழார் 'ஞானசம்பந்தரது உள்ளத்தில் பகைமையுணர்வு சிறிதும் இல்லை' என்பதையும் குறிப்பிடத் தவற வில்லை.

''இகல் இலர் எனினும்''
என்பது அத்தொடர்.

இனி, 'அரசு முறை நோக்கில் ஞானசம்பந்தர் அரசன் செயலை விலக்க வேண்டுவதில்லை என்பது உண்மைதான்; ஆனல், பொதுவாக இரக்கம், அருள், கருணை, என்ற வகையில் அவர் அரசன் செயலை விலக்கத்தானே வேண்டும் என்று வினவலாம். அதற்கும் சேக்கிழார் விடை கூறியேயுள்ளார்.

அது, ''சைவர் இருந்து வாழ் மடத்தில் தீங்கு-தகவிலாச் சமணர் செய்த தன்மையால் சாலும்'' என்பதாகும்.

'சிவனுக்கும், சிவன் அடியார்க்கும் செய்த குற்றம் எவ்வாற்ருனும் தீர்திறம் உடையதன்று. நெடுங் காலம் நிரயத்து அழுந்தியே அதனைத் தீர்த்தல் வேண்டும். ஆயினும், அக்குற்றம் பற்றி அரசனல் ஒறுக்கப்பட்டால் அக் குற்றம் பெரிதும் தீர்ந்து, நிரயத் துன்பம் விலகும்' என்பது சிவ நெறிக் கொள்கை.

இது பிற சமயிகட்குப் பொருந் தாக் கொள்கையாய்இருக்கலாம். ஆனல், சிவநெறிப்பொருள் ஆசிரியராகிய ஞானசம்பந்தருக்கு இது பொருந்தாக் கொள்கையாய்த் தோன்றுமோ? தோன்ருது. அவ் வகையில் நோக்கினல் அவர் அரசன் செயலை விலக்காதிருந் தும் கருணையே-மறக்கருணை என் பதாகின்றது. ஆதலின், கருணை நோக்கிலும் அவர் அரசன் செயலை விலக்கக் காரணம் இல்லையாதல் விளங்கும்.

மாறனும் முன்னைய சமண் மாறனய் இருந்து இதனைச் செய்யவில்லை, சைவ மாறன் ஆனபினகே செய் கின்ருன். அதனல் அவனுக்கு இதில் ஞானசம்பந்தரோடுகருத்து வேற்றுமை இருத்தற்கில்லை என் பதையும் நோக்குதல் வேண்டும்.

இனி மற்ருென்று:-

பாண்டியனது வெப்பு நோய் தீர்த்தல் வாதம், அனல் வாதம் என்னும் இரண்டு வாதங்கள் முடிந்த பின்பு சமணர்கள் மூன்ருதாகப் புனல் வாதம் நிகழ்தல் வேண்டும் என வழக்குரைத்தார் கள். அப்பொழுது அமைச்சராகிய

குலச்சிறையார், 'இந்த வாதத்திற்கு முற்றுப் புள்ளி வைப்பது எப்பொழுது' என்று கேட்கும் முறையில், ''இனி, வாதில் தோற்றவர் இன்ன ஒறுப்புக்கு உள்ளாதல் வேண்டும் என்று ஒப்புக்கொண்ட பின்புதான் வாதத்தைத் தொடங்க வேண்டும்'' என்றார். அமைச்சர் கூற்று இருதிறத்தாரையும் பற்றியதேயாயினும், சமணர்கள், தங்களைப் பற்றி மட்டுந்தான் அமைச்சர் கூறியதாகவும், தாங்கள் தோற்பது உறுதி என்று அவர் முடிவு செய்து கொண்டு அதன் மேல் அவர் இவ்வாறு கூறியதாகவும் கொண்டு, அவர்மேல் எழுந்த சிற்றத்தால் சமணர்கள், ஞானசம்பந்தரோ, அரசனோ ஒன்று சொல்வதற்கு முன்னே, ''புனல் வாதத்தில் நாங்கள் தோற்றால் எங்களை அரசன் கழுவேற்றட்டும், என்று பதற்றத்தால் உறுதிப்படக் கூறினர். அதைக் கேட்ட அரசன் அவர்கள் நிலைக்கு இரங்கி

''செற்றத்தால் உரைத்தீர்;
உங்கள் செய்கையும் மறந்தீர்''

என்றான். அதன் குறிப்பு, 'நீங்கள் தோற்பது திண்ணம். தோற்றால் இங்கு இப்பொழுது செய்யப்படும் முடிவு தவறாமல் நிறைவேற்றப்படும் ஆகையால், இப்பொழுதுங் காலம் கடந்து விடவில்லை, எண்ணிப் பார்த்து முடிவு கூறுங்கள் என அவர்களை எச்சரித்ததேயாகும். எனவே, சமணர்கள் நன்கு எண்ணிப்பார்த்து முடிவு கூற அவர்களுக்குப்போதுமான வாய்ப்பு அரசனால் அளிக்கப்பட்டது. இதில் 'உங்கள் செய்கை' என்றது, 'நாட்டில் விளைகளந்த வகையிலும் கொலை நிகழ்தல் கூடாது' என்பது அவர்கள் கொள்கையாதலைக் குறித்ததாம். அரசன் இவ்வளவு சொல்லியும் அவர்களது சிற்றமும் மான உணர்ச்சியும் சிறிதும் மாறவில்லை. அதனால், அவர்கள் தாங்கள் முதலில் சொல்லியதையே உறுதி செய்தார்கள். இதில், 'சம்பந்தர் தோற்றால் அவருக்கும் இதுபொருந்துந்தானே' என்பதும் அவர்கள் எண்ணம் ஆதலையும் நாம் மறந்து விடுவதற்கில்லை.

'சமணர்கள் தோற்பது உறுதி' என்பது குலச்சிறையார், ஞானசம்பந்தர், அரசன் முதலியோர்க்குக் கருத்தாய் இருந்தபோதிலும், 'தோற்றவர்க்கு இன்ன தண்டனை' என்று பிறர் யாரும் சொல்லவில்லை. அப்படிச் சொல்லியிருந்தால், அதற்கு ஏதாவது ஓர் உள்நோக்கத்தைக் கற்பிக்கலாம், அப்படி யாரும் சொல்லவில்லை.

இந்நிலையில் சமணர்கள் தோற்றுவிட்டார்கள். தோற்றபின் தோற்றவர் இன்ன தண்டனையை ஏற்க வேண்டும்' என்று முதலில் செய்த முடிவை நிறைவேற்றும் கடமை யாருடையது? இருபக்கத்தார்க்கும் இடையே நடுவனாய் நின்று வாதத்தை நிகழ்வித்த அரசனுடையதேயன்றோ? அந்த வகையிலும் அவன் இட்ட உத்தரவு முழு நேர்மையுடையது தானே?

அதனுல், சமணர்கள் தாங்களாக வே தங்களுக்கு வருவித்துக் கொண்ட தீங்கு அவர்களை வந்து பற்ற, அதனை அவர்கள் அனுப விக்கும் பொழுது அதனைக் கண்டு பிறர் இரங்கி என்ன பயன்!

'சமணர்கள் தாங்களே செய்த முடிவு இது' என்பது தோன்றவே அரசன் அமைச்சர்க்கு அதனை நிறைவேற்ற உத்தரவிடும் பொ ழுது, 'இச்சமணர்' என்று மட்டும் கூருமல்,

''துன்னிய வாதில் ஒட்டித்
தோற்ற இச்சமணர்''

என்முன் ஒட்டுதல் – வாதத்தில் உறுதி கூறுதல்.

இத்துணைக் கருத்துக்களை உள்ள டக்கியே சேக்கிழார் இந்நிகழ்ச் சியை இரண்டே பாடல்களில் பின் வருமாறு கூறினுர்.

மன்னவன் மாறன் கண்டு
மந்திரி யாரை நோக்கி.
துன்னிய வாதில் ஒட்டித்
தோற்ற இச்சமணர் தாங்கள்
முன்னமே பிள்ளை யார்பால்
அனுசிதம் முற்றச் செய்தார்,
கொன்னுனைக் கழுவில் ஏற்றி
முறைசெய்கை என்று கூற
புகலியில் வந்த ஞான
புங்கவர் அதனைக் கேட்டும்
இகலிலர் எனினும் சைவர்
இருந்து வாழ் மடத்தில் தீங்கு
தகவிலாச் சமணர் செய்த
தன்மையால் சாலும் என்றே
மிகையிலா வேந்தன செய்கை
விலக்கிடா திருந்த வேலை.

காய்தல், உவத்தல் இன்றி நடுவு நின்று ஆராய்பவர்க்குச் சேக்கிழாரது திருமொழி பற்றிச் சிந்திக்கும் சிந்தனையாக மேற் கூறப்பட்டவற்றில் சிறிதேனும் உண்மையிருப்பதாகக்தோன்றும். அவ்வாறின்றி, 'பெரிய ஒரு தடைக்குச் சேக்கிழார் ஏதோ ஒரு விடை கூறிவிட்டு அப்பாற் செல் கிருர்' என்று முன்னமே முடிவு செய்து கொண்டு பார்ப்பவர் களுக்கு, இதற்குமேல் தாங்களே சொந்தமாகத் தங்கள் சிந்தனையை செலுத்திபார்க்க விருப்புபவர்கள் அவ்வாறு செய்து எந்த முடிவை யேனும் கூறட்டும்; அதற்குத் தடை என்ன இருக்கிறது?

---

## — இதமான வாழ்வுக்கு எளிய வழிகள் —

பிணிதீர்க்கும் பஞ்ச கற்பம்

(அ) கஸ்தூரி மஞ்சள், மிளகு. வேப்பம்விதை, கடுக்காய்த்தோல், நெல்லிப்பருப்பு இவை கூட்டி காராம்பசுவின் பாலிட்டு அரைத்து கொதிக்கவைத்து மேற்படி கலவையை வாரம் ஒருமுறை தலைமுழுகி வந்தால் பிணிக்கு இடமில்லை.

வெள்ளெழுத்துக்கு

(ஆ) குமிழம் விதையை பிள்ளைப்பாலில் இழைத்துச் சிறுபயறளவு கண்களிலிட்டுவர வெள்ளெழுத்து மாறும்.

காது எழிச்சிக்கு

(இ) கிலுகிலுப்பை வேரை அரைத்து நல்லெண்ணெயிற் காய்ச்சிக் காதிலிட இரண்டு மூன்று வேளையில் காது எழுச்சி தீரும்.

டாக்டர் N. சடையப்பன், S. M. P.

---

# நூல் நிறை

## நான் கண்டதும் கேட்டதும்!

[ஆசிரியர்: டாக்டர் உ. வே. சா; பக்கம் 8 + 87, விலை ரூ. 5/- எட்டாம் பதிப்பு: வெளியீடும், கிடைக்கும் இடமும்: மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம். திருவான்மியூர். சென்னை - 600 041]

இது டாக்டர் உ. வே. சா. நூல்நிலையத்தின் 64 ஆவது வெளியீடு. டாக்டர் உ. வே. சா. அவர்களின் அரிய அநுபங்களின் தொகுப்புக் கட்டுரைகள் 12 இந்நூலுள் உள்ளன. நகைச் சுவையும் பேரறிவுத்திரட்சியும் இக்கட்டுரைகளின் மூலதனம். தமிழகம் நன்கறிந்த இந்நூல் நூலக வெளியீடாக வெளிவந்துள்ளது. தமிழன்பர்கள் அனைவரிடமும் அவசியம் இருக்க வேண்டிய நூலாகும்.

# சிறந்தவர் யார்?

‘கண்ணபிரான்’

ஒரு நாள் ஒரு நாட்டு அரசன் தன் மந்திரி பிரதானிகளை அழைத்து ‘‘உலகிலேயே சிறந்த அறிவாளி, வீரன், கொடையாளி, அழகி, கற்புடையவள், முட்டாள், தந்திரசாலி, ஆகியோரை கண்டு பிடித்துச் சொல்லுங்கள். ஒரு மாதம் இடைவெளி தருகிறேன். அதற்குள் கண்டுபிடிக்க வேண்டும்’’ என்று கட்டளையிட்டான்.

எல்லோடும் ஒரு மாதமும் எங்கெங்கோ சுற்றி அலைந்தார்கள். மண்டையை உடைத்துக் கொண்டார்கள். ஒரு மாதமும் முடிந்து விட்டது.

அரசன் சபையைக் கூட்டினுன்.

‘‘உலகிலேயே சிறந்த அறிவாளி அவந்தி நாட்டு முனிவர்’’.

‘‘இல்லை. வருமுன் காப்பவன் தான் அறிவாளி’’

‘இறைவனே சிறந்த அறிவாளி’

‘‘சிறந்த வீரன் நம் படைத் தளபதியே’’

‘‘இல்லை. ஐம்புலன்களை அடக்கியவனே வீரன்’’

‘‘அர்ச்சுனனே வீரன்’’

‘‘முருகக் கடவுள் சிறந்த ஒப்பற்ற வீரர்’’

‘‘சிறந்த கொடையாளி கர்ணன்’’

‘‘இல்லை. மக்களுக்காக உழைப்பவனே கொடையாளி’’

‘‘பாரி மன்னன் தான்’’

‘‘இல்லை மேகம் தான்’’

‘‘சிறந்த அழகி குந்தள நாட்டு இளவரசிதான்’’

‘‘இல்லை. ரதி தான்’’

‘‘மேனகை’’

‘‘இயற்கையே சிறந்த அழகி’’

‘‘சிறந்த கற்புடையவள் சீதை தான்’’

‘‘இல்லை. நளாயினிதான்’’

‘‘கண்ணகிதான்’’

‘‘பெரிய முட்டாள் கல்வி அறிவேயில்லாதவன்’’

‘‘இல்லை கற்றும் அதற்கேற்ற படி நடக்காதவன்’’

‘‘இரண்டுமில்லை. அவசியமில்லாமல் உளறுபவன்தான்’’

‘‘சிறந்த தந்திரசாலி நம் அமைச்சரே’’

‘‘இல்லை. சாணக்கியர்’’

‘‘கண்ணன் தான்’’

‘‘சகுனிதான்’’

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த அரசன் கடுங் கோபம் அடைந்து அவர்களை எல்லாம் சிறையிலிட உத்திரவிட்டான்.

அது வரை வாயை மூடிக் கொண்டிருந்த ஒரு சாதாரன சிப்பந்தி எழுந்தான்.

"அரசே நான் சொல்கிறேன்''

"சொல்''

"சிறந்த அறிவாளி தாங்கள் தான்''

"பலே! பலே!

"ஒப்பற்ற வீரரும் தாங்களே''

"பலே! பலே!''

"சிறந்த கொடையாளியும் தாங்களே ...... தாங்கள் அளிக்காத கொடையா!

"ஆஹா .. பலே''

"ஒப்பற்ற அழகி தங்கள் திருக்குமாரிதான்''

"பேஷ்... பலே''

"சிறந்த கற்புடையவள் தங்கள் திருத் துணைவியார் தான்''

"பலே... அப்படிச் சொல்லு''

"சிறந்த முட்டாள் தங்களை எதிரிதான்''

"ரொம்ப சரியே''

"சிறந்த தந்திர சாலிகள் இருவர் இருக்கின்றனர்''

"இருவரா?''

"ஆம் ... தாங்கள். இன்னொருவன் அடியேன். ஆனால் தங்களை விட ஒரு பங்கு குறைந்தவன் தான்''

"ஆஹா ... நீயே என் மந்திரியாக இருக்க வேண்டியவன். இன்று முதல் நீயே என் மந்திரி. இப்படி வந்து அருகில் உட்கார்''

மந்திரியான அந்த சமயோசித சாலி மெல்ல நகைத்துக் கொண்டான்.

---

# இருபா இருபஃது

தெளிவுரை :

**சு. சுந்தரமூர்த்தி** எம். ஏ., திருப்பனந்தாள்

இறைவன் உயிரொடு கூடிநிற்கும் திறத்தை மூவகையால் எண்ணியாராய்ந்து இப்பாடல் விளக்கம் தருகின்றது. உயிரிடத்து இறைவன் ஒரொருகால் பற்றியும் விட்டும் நிற்பது ஏன்? என்பது முதல்வினவாகும். உயிர் நினைந்துழி இறைவன் அதனைப் பற்றியும் நினையாவிடத்து அதனைப் பற்றாதும் இருப்பன் என்பது அதற்குரிய விடையாகும். 'பன்னிலூறும் பழத்தினிலின் சுவை, என்னிலூறி யெனக்கே களிதரும், உன்னி லுன்னும் உணவிடில் விட்டிடும், என்னு ளீச னிருந்த வியற்கையே' எனவரும் அப்பர்பெருமான் திருவாக்கு அதற்கு அரணாகும். இத்திருவாக்கு 4, 5, 6 ஆம் திருமுறையில் காணப்பட்டிலதேனும் இச் சாத்திரப் பனுவலானும், தாயுமானுர் திருவாக்கானும் இதனுண்மை அறியப்படுகிறது. 'உன்னிலுன்னு மென்ற உறுதிமொழியா லென்னிதயந், தன்னிலுன்னி நன்னெறியைச் சாருநா ளெந்நாளோ' என்பது தாயுமானுர் திருவாக்காகும். இது முதல்வகை.

இவ்வாறு கூறின் இறைவன் உயிர்க்கு ஏவலனும் ஒருவழி நிற்பவனும் ஆகுமேயெனக் கருதிப் பிறிதொரு வகையில் அமைதி கூறப்படுகிறது. உயிர் வேண்டுழி இறைவனையடைந்தும் வேண்டாவிடத்துப் பிரிந்தும் நிற்கும் என்பது அவ்வமைதியாகும். இவ்வாறு கூறினும் மரநிழல் வெப்பத்தால் துயருற்று வருவோரை விரும்பியேற்பதும் இல்லை வாராதோரை வெறுப்பதுமில்லை: இந்நிலையேஇறைவனுக்கும் எய்தி இறைவனுக்கு உயிர்கள் மாட்டுளதாய கருணை இலதாய் முடியுமே என அதற்கும் ஒருதடை எழுப்பப்படுகிறது. இது இரண்டாம் வகை.

இறைவன் அருட்கனிவுற்றபோது உயிரைச் சேர்வன்; அல்லுழிச் சேரான் என மூன்றுவதாக அமைதி கூறப்படுகிறது. அனைத்துயிர்களிடத்தும் அருளுடையவன் இறைவன் எனக்கூறும் நிலைக்கு அதுவும் மாறாகும் என அதற்கும் தடை எழ இத்தடைகட்கு விடை கூறுமாறு மேலும் வேண்டப்படுகிறது. இது மூன்றுவது வகை.

இவ்வாறு கூறின் இவ்வினுக்களை விடுக்குமாறுதான் என்னை? இறைவன் உயிர்க்குயிராய் யாண்டும் நீக்கமற நிற்கின்றான். ஆதலின் இறைவன் உயிரைக்கூடுவதோ அன்றி உயிர் இறைவனைக் கூடுவதோ என்பது ஒன்றில்லை; உயிர்க்குயிராய் விளங்கும் இறைவன் உயிர்களிடத்து மலம் நீங்குங்காறும் தோன்றாத்துணையாய் நின்றருளியும் நீங்கியபின் வெளிப்பட்டும் அருளுவன் என்பதே இவற்றிற்குரிய விடையாகும்.

படாம்-திரை. வியம்-ஏவல். கோள்-கொள்ளுதல் 'வியங்கொண்டான் கங்குல் கனைசுடர் கால்சியா முன்' என்ற விடத்தும் இப்பொருள் படுதல் காண்க. ஆற்றுத் துயர்-வழியிடை ஏற்பட்ட வெப்புத்துன்பம். உற்பவம்-பிறப்பு. 'சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை வெல்லும் சொல் இன்மையறிந்து' என்னும் குறட் பொருண்மையை இறுதியடிகள் நினைவு கூரச் செய்கின்றன.

13 இறந்தோய் கரணங்கள் எல்லாம் எனக்குச்
சிறந்தோய் எனினும் மெய்த் தேவே-பிறந்துடனும்
காயங் கொளவுங் கொளாமலும் கண்டதும் நீ
ஆயன்கொல் பாதவத் தற்று.

(தெ-ரை) கருவிகளுக்கு அப்பாற்பட்டு நிற்கும் நீ அடியேனுக்கு மட்டும் அவற்றைக் கொடுத்தருளுகின்றாய். அங்ஙனம் கொடுத்தருளப்பட்ட கருவிகளுடன் அடியேன் இருந்தும் இடையன் வெட்டிய மரம் போல அக்கருவிகளோடு பொருந்தியும் பொருந்தாதும் இருக்கச் செய்கின்றாய். இதன் காரணம் ஏன்? அருளுவாயாக என்பதாம்.

கருவிகள் நிலையுடையன வல்ல ஆயினும் உயிர் அவற்றுடன் பொருந்தியும் பொருந்தாதும் நிற்பதன் வாயிலாக ஐவகைத் துன்பம் உற்று வினைநீக்கம் பெற வேண்டியுள்ளது. இதற்காகவே இறைவன் இந்நிலையை எய்துவிக்கிறான் என்பது உணரத்தக்கதாம். இடையன் ஆடுகளுக்குத் தழையுதவுங்கால் மரத்தை முழுமையாக வெட்டுவதில்லை. ஆடு அதனை உண்ணுமளவிற்கே வெட்டித் தாழச் செய்வன். காரணம் பின்னும் அது தழைத்தற் பொருட்டாம். இவ்வாறே இறைவனும் வினைநீக்கம் பெறுமளவிற்குக் கருவிகளைக் கொடுத்தும், அவற்றால் கட்டுண்ட உடல் துயரால் அயர்வு நீங்க அவற்றை விடுவித்தும் அருளுவன். உயிர் முழுமையாக மலநீக்கம் பெறின் அக்கருவிகளினின்றும் முழுமையாக விடுவித்துவிடுவன்.

14. அற்றதுஎன் பாசம் உற்றதுன் கழலே
அருட்டுறை யுறையும் பொருட்சுவை நாத
வேறென்று இருந்த என்னை யான்பெற
வேறின்மை கண்ட மெய்கண்ட தேவ
இருவினை யென்பது என்னைகொல் அருளிய
மனமே காயம் வாக்கெனும் மூன்றின்
இதமே அகித யெனுமிவை யாயிற்
கணத்திடை யழியுந் தினைத்துணை யாகா
காரணஞ் சடம்அதன் காரியம் அஃதால்
ஆரணங் காம்வழி யடியேற் கென்னைகொல்
செயலென தாயினுஞ் செயலே வாராது
இயமன் செய்தி யிதற்கெனின் அவைவும்
பின்னையின் ருகும் அன்னதும் இங்சச்
செய்திக் குள்ள செயலவை யருத்தின்
மையல்தீர் இயமற்கு வழக்கில்லை மன்ன
ஒருவரே யமையும் ஒருவா ஒருவற்கு
இருவரும் வேண்டா இறைவனும் நின்றனை
நின்னது கருணை சொல்லள வின்றே
அமைத்தது துய்ப்பின் எமக்குஅணை வின்ரும்
உள்ளது போகாது இல்லது வாராது
உள்ளதே யுள்ளது எனுமுரை அதனல்
கொள்ளும் வகையாற் கொளுத்திடு மாயின்
வள்ளன் மையெலா முன்னிட வமையும்
ஈய வேண்டும் எனும்விதி யின்ரும்
ஆயினும் என்னை யருந்துயர்ப் படுத்த
நாயி னேற்கு நன்றுமன் மாயக்
கருமமும் கரும பந்தமும்
தெருள அருளும் சிவபெரு மானே!

(தெ-ரை) திருவருட்டுறையில் எழுந்தருளியிருக்கும் இனிமைப் பயனுயுள்ள தலைவனே! நும்மின் வேருகக்கருதியிருந்த அடியனை அடியேனென்னும் முதலும் கெ ாதவாறு நும்மொடு ஒன்ருந் தன்மையைக் கூட்டியருளிய மெய்கண்டதேவே! நுமது பேரருட்பெருக்கினலே அடியேனுக்கு உளதாய தளைஅற்றது, ஆதலின் நுமது திருவடிப்பேறும் கை வரப்பெற்றது. அதுநிற்க. அடியேனுக்குப் புண்ணியம் என்றும் பாவம் என்றும் கூறப்படும் இருவினைகள் எதனல் உளவாயின? நீர் அருளிய மனம், மொழி, மெய் எனும் முக்கருவிகளின் வாயிலாகவரும் நினைவு,

சொல், செயல் ஆகியவற்றல் உளவாயினஎனில் அவை உடன்அழிவன வாம். ஒரு திகையளவும் திண்ணிதாய் நில்லாவாம். அன்றியும் அவை அறிவற்றன. எனவே அவற்றினுல் உளவாய இரு வினைகளும் அறிவற்றனவேயாம். அங்ஙனமாக அவை அடியேனின் பிறப்பு இறப் பிற்குக் காரணமாதல் எங்ஙனம்? அவை அறிவற்றனவேனும் அறி வுடைய அடியேனுடன் கூடுதலின் அவற்றின் விளைவு ஏற்படும் எனின் அவ்விளைவினுல் உளதாய செயல் அடியேனுக்கு வரக்கடவதன்று. அன்றி அடியேன் அச்செயல்களை ஏற்பின் இயமன் என்னை வருத்த வேண்டுவதில்லை. அன்றியும்நீஅடியேனுக்குஅனைத்தும்செய்விக்கின்ருய் என்பதும் இல்லையாகும். அடியேனின் கன்மத்துக்கு ஈடாக நீர் நுகர் விப்பதாயின் இயமதண்டனைக்கு யான் உட்படுமாறில்லை. உயிர்கள் செய்த வினைக்கு ஏற்ப நாமும் செய்விப்போம், இயமனும் ஒறுப்பன் எனில் நும் இருவரில் ஒருவரே அமையும். அடியேனுகிய ஒருவனுக் காக இருவர் இருந்து அதனை ஆற்றவேண்டுவதில்லை. அன்றியும் எங் கும் இருந்தருளும் இறைவனே எதனையும் செய்கின்றனன் என்னும் கூற்றுக்கும் மாருகும். நுமது கருணைக்கோ எல்லையின்று. அடியே னுக்கு எதனைத்துய்க்க வேண்டுமென்று உளதோ அதனைத் துய்த்தே ஆகவேண்டும். உள்ளது போகாது. இல்லது வாராது. ஆதலின் உள்ளதே உள்ளது. அடியேன் நுகர்வினையைத் துய்க்கும் பொழுதே மேலும் வருவினை வரவேண்டுவதில்லை. அவ்வாறன்றி நுகர்வினையைத் துய்க்கும் பொழுதே மேலே வருவினையும் வருமெனில் ஒன்றைச்செய்து அதனுல் அறப்பயன் எய்தவேண்டும் என நூல்கள் விதிக்க வேண்டுவ தில்லை. ஆதலின் அடியேனை வருத்துவதற்கு உளதாய இருவினைகளி னுலாய பயன்களைத் துய்க்குமாறும், அவ்வாறு துய்க்குங்கால் மேலும் வினைஏறுமாறும் ஆகிய காரணங்களைச் சிவபெருமானே! நீரே அருளல் வேண்டும் என்பதாம்.

இருவினை எதனுல் வந்தது என்பது முதல்வினு. முக்கருவிகளின் தொழிற்பட்டால் வந்தன என்பது அதற்குரிய விடையாகும். முக் கருவிகளும் அறிவற்றனவாயிருக்க அவற்றல் வந்தது எங்ஙனம்? என் பது அடுத்த வினு. அவை அறிவற்றன எனினும் அறிவுடைய உயிரைக் கூடுதலின் அவற்றல் வினைவிளைவு வருதல் கூடும் என்பது அதற்கு விடை யாகும். வினைவிளைவுகள் முக்கருவிகளால் உளவாயின் செய்வினைக் கேற்ப ஒறுத்தலைச் செய்தற்கு இயமன் வருவானேன்? ஒறுத்தற்கு ஒரு வர் வேண்டுமெனினும் இறைவனுகிய நீர் இருத்தலே அமையுமே என் பது அடுத்த வினுவாகும். உயிர்களின் வினைவிளைவுகளுக்கு ஏற்ப இறை வனே இயமனைக்கொண்டு ஒறுத்து வருகின்றனன் என்பதே அதற்குரிய விடையாகும். உள்ளது போகாது இல்லது வாராது என்பது உண்மை

யாதலின் முன்செய்த வினைக்கேற்ப உயிர் துய்ப்பதல்லது மேலும் வினையேறுகைக்கு வழியில்லையே, அன்றியும் முன்னை வினைக்கேற்பத் துய்ப்பதன்றி மேலும் நல்லறன் செய்ய வேண்டுவது ஏன்? என்பது அடுத்த வினுவாகும். முன்னை வினைக்கு ஈடாய் உயிர் துய்க்கும் பொழுது உளவாகும் விடுப்பு வெறுப்புக்களால் மேலும் வினையேறு வது இயற்கையாம். ஆதலின் விடுப்பு வெறுப்பின்றித் திருவருட் சிந்தனையுடன் நல்லன ஆற்றுதல் வேண்டுமென விதிக்கப்பட்டது என்பது அதற்குரிய விடையாகும்.

கொல்-என்பன ஐயப்பொருட்டு. இதம்-விருப்பு. அகிதம்-வெறுப்பு. சடம்-அறிவற்றது. அணங்குதல்-வருத்துதல். ஒருவா-ஒப்பற்றவனே. மன்-அசைநிலை.

15. மானமரும் செங்கை மதில்வெண்ணெய் வாழ்மன்ன!
 போன வினைதானே பொருந்துமோ? — யான்அதனில்
 ஆவனோ ஆக்காய் அமலனும் நின்னருள்தான்
 தேவனே! யாதுக்கோ தேர்.

(தெ-ரை)மானைக் கையில் கொண்டு மதில் சூழ்ந்த திருவெண்ணெய்நல் லூரின்கண் எழுந்தருளியிருக்கும் மன்னவனே! முற்பிறவியில்அடியேன் செய்த அறப்பயன்கள் தாமேவந்து கூடுமோ? அன்றி அவற்றில் நான் சென்று கூடுவனோ? அன்றி நீர்தான் கூட்டுவீரோ? நீர் வினையின் நீங்கியவராதலின் உயிரை அதனொடு கூட்டமாட்டீர். அவ்வாறுக நும் அருள்தான் எற்றுக்கு அருள்வீராக! என்பதாம்.

வினை தாமாகக் கூடுவதன்று. உயிர் தானே அறிந்து அதனொடு கூடுவதுமன்று. இறைவனே இவ்விரண்டையும் இயைவித்தருள்வன். ஆயினும் அவன் அவ்வினைபினால் பிணிப்புறான். 'அவ்வினையைச் செய்வதனில் அவ்வினைஞர்தாம் சென்றுஅங்கு, அவ்வினையைக் கலந்த பசாசம்போல் - அவ்வினையைப், பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல், ஆர்தாம் அறிந்தணைப்பா ராங்கு' எனவரும் சிவஞான போதப் பாடலும் காண்க.

16. தேராது உரைப்பன் தெருமர லுளத்தொடு
 பேராது அருளுதல் பெரியோர் கடனே
 நின்னைக் கலப்பது என்னுண் மையெனின்
 நின்னது நேர்மை சொல்மனத் தின்றே
 எழுவகைத் தாதுவின் எழுதுளையிரண்டும்

பெருமழைக் குரம்பையின் பெய்தகத் தடக்கி
நீக்கி என்றனைப் போக்கற நிறுத்தி
இச்சை முதலிய எழுப்பி நடத்திடும்
விச்சை சாலவும் வியப்புஅது நிற்க
வாக்கு மனமும் போக்குள தநுவும்
சொல்லும் நினைவும் செய்யும் செயலும்
நல்லவும் தியவும் எல்லாம் அறிந்து
முறை பிறழாமல் குறைவுநிறை வின்றாய்க்
காலமும் தேசமும் மாலற வகுத்து
நடுவுநின்று அடுத்தலின் நடுவனு குதியே
சான்றோர் செய்தி மான்றிடுப் பின்றே
சாலார் செயலே மாலா குவதே
யத்துவா மெத்தி அடங்கா வினைகளும்
சுத்திசெய் தனையே ஒத்தகன் மத்திடை
நீங்கின எவ்வினை ஊங்கூழ் வினைகளும்
ஆங்கவை யடுத்துவது ஆரைகொல் அதனாற்
சுருமம் அடுத்தும் கடனது வின்றாம்
தருமம் புரத்தல் பெருமைய தன்றே
கண்ணினுள் மணிய! கருத்தினுள் கருத்த!
வெண்ணெய் வேந்த! மெய்கண்ட தேவ!
இடர்ப்படு தூரம்பையுள் இடுத்தித்
துடைப்பதில் லாவருள் தோன்றிடச் சொல்லே.

(தெ-ரை) கண்ணினுளிருக்கும் மணியே! கருத்தினுள் இருக்கும் கருத்தே! திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியிருக்கும் தலைவ! மெய்கண்ட தேவே! சுழற்சியுடைய உள்ளத்தனுதலின் அறியாது ஒன்றினை வினவு கின்றேன். அமைதியாகக் கேட்டருளுதல் பெரியோனாகிய நின் கடமையாகும். நும்மைச்கூடி அதனாலாய பேரின்பத்தைத் துய்ப்பது அடியேனது அறிவு எனில், நும்இயல்பு மாற்றமும் மனமும் கழிய நின்றது ஆதலின் அது எங்ஙனம் கூடும்? நரம்பு, எலும்பு, மூளை, தசை, தோல், குருதி, விந்து எனப்பட்ட தாதுக்கள் ஏழும், கண், மூக்கு, செவி, கருவாய் எனப்பட்ட இழிந்த துளைகள் ஏழும், வாய், எருவாய் எனப்பட்ட பெரிய துளைகள் இரண்டும் ஆக ஒன்பதும் கூட்டப்பட்ட இவ்வுடலிலே உயிரை ஒடுக்கி வைத்து வினையின் கால அளவிற்கு ஏற்ப அதனிடத்தினின்றும் நீங்காது இருத்தி பின் கால எல்லை முடியுங்கால் அதனினின்று விடுவிப்பதும் செய்து, உடலொடு

கூடியசக்கால் அறிவு, இச்சை, செயல்களையும் உளவாக்கித் தொழிற் படுத்துகின்ற நினது ஆற்றல் மிகவும் வியத்தற்குரியது. அது நிற்க. அடியேனின் மனம், மொழி, மெய் ஆகிய முக்கருவிகளானும் உள வாய நன்மை தீமைகளை அறிந்து அவற்றிற்கேற்ப முறை பிறழா மலும், ஏற்றத்தாழ்வு இன்றியும், காலமும் இடனும் வகுத்து அவற் றின் விளைவுகளை நுகருமாறு நடுவுநின்று அருளுதலின் நீ நடுவுநிலை யுடையவன் எனற்குரியை. நடுவுநிலை திறம்பாத சான்றோரின் செயல் மயக்கம் தருவதன்று. அது இழிந்தோர் செயலேயாகும். மந்திரம், சொல், எழுத்து, உலகு, தத்துவம், கலைஎனப்பட்ட அறுவகையாலும் நிரப்பி எஞ்சிக்கிடந்த என் வினைகளையெல்லாம் தீக்கையால் தூய்மை செய்தனை. அவ்வாறிருக்க அடியேனுக்கு இருவினையொப்பு வாய்த்த பொழுது எவ்வினை ஒழிந்தது? நும் தீக்கையினால் தூய்மை பெற்ற பொழுது எஞ்சிய கன்மங்களை யார்தாம் நுகர்வர்? நின் அருளால் அடியேன் தூய்மை பெற்ற பின்னும் அதனைத் துய்ப்பின் அது முறை யின்றாம். வினைவழி வருகின்றஅதனைப் பாதுகாப்பதும் நும்பெருமைக் குரிய தன்றே. வினை ஒழிந்த பின்னும் துன்பத்திற்கேதுவாய இவ்வு டலின்கண் இருத்துதற்கும், அதன்வழி வினையை நீக்குதற்கும் என்ன காரணம் உளது? என்பதை அடியேனுக்கு விளக்கியருளுக என்பதாம்.

இறைவன் உயிரைக் கலந்து நிற்பது உண்மை எனில், அவன் மாற்றம், மனம் கழிய நின்றான் என்பது எப்படிப் பொருந்தும் என்பது முதல் வினவாகும். இறைவன் உயிருடன் எக்காலத்தும் பிரிவின்றி இயைந்துளன். எனினும் உயிர் மலப்பிணிப்பால் அதனை உணருவதில்லை. அந்நிலையிலேயே அதன் மனம் மொழிகளால் அறியப் படுபவனல்லன் என்பது அதற்குரிய விடையாகும். இறைவனோடு பிரிவின்றியிருந்தும் உயிரிடத்து உடலைக் கூட்டுவது ஏன் என்பது அடுத்த வினவாகும். குருடனுக்குக் கோல் கொடுப்பது போல, மலப் பிணிப்புடைய உயிர்க்கு உடலைக் கொடுத்து அதன்வழி அதன் வினை நுகர்வைச்செய்கிறான் என்பது அதற்குரிய விடையாகும். நடுவனாக வும், சான்றோனாகவும் இருக்கும் இறைவன் அத்துவாக்களின் வழி உயிரது வினையைப் போக்கினபின், நீங்கிய வினை எது என்பது அடுத்த வினவாகும். பழவினையும் வருவினையும் நீங்கின என்பது அதற்குரிய விடையாகும். இறைவன் தன் அருள்விளக்கத்தால் உயிரது வினை மாசினைப் போக்கிய பின்னும் உடலொடு இருத்துவது ஏன் என்பது அடுத்த வினவாகும். பழவினையும் வருவினையும் நீங்கினவேனும் நுகர் வினை அவர்க்கு உளதாம். அது உடலொடு நீங்குவது ஆதலின் அது காறும் அவ்வுடலொடு இருத்தியுள்ளான் என்பது அதற்குரிய விடை

யாகும். அத்தகையோர் அவ்வுடலொடு இருப்பினும் அவ்வுடல் ஞானவுடலாகும் என்பது அறியத்தக்கது. ஆதலால்தான் அவர்களை வணங்கவும், வாழ்த்தவும் வேண்டும் என மெய்நூல்கள் நுவலுகின்றன. அவர்கள் இறைவயப்பட்டு நிற்றலின் அவ்வாழ்த்தும் வணக்கமும் இறைவனுக்கே உரியதாகின்றன. அப்பர், ஞானசப்பந்தர், சுந்தரர், மணிவாசகர் முதலிய அருளாளர்கள் அத்தகையோர்கள் ஆவர்.

தெருமரல்-சுழற்சி.: உலகியல் சுழற்சி. பெருமுழை-பெருந்துளை, குரம்பை-உடல். தநு-உடல். மால் இருப்பு இன்றே என்பது மான்று இருப்பு இன்றே என்றாயது. மெத்தி-நிரம்பி. ஊங்குஊழ்-மேலுள்ள வினைகள், தடுமம்-ஈண்டு அதன் வடிவான இறைவனைக் குறித்தது. துடைப்பது இல்லா அருள்-நீங்குதலில்லாத அடுள்.

17. சொற்றொழும்பு கொள்ளநீ சூழ்ந்ததுவும் நிற்செயல்கள்
மற்றவர்கள் நின்னுேக்கின் மாய்ந்தவுயிர்க்கு — உற்றுஅங்கு
ஒளித்தியாங்கு ஐயஉயர் வெண்ணெய் நல்லூர்க்
குளித்தமதுக் கொன்றையெங் கோ.

(தெ-ரை) சிறப்புமிக்க திருவெண்ணெய்நல்லூரின்கண் தேன்துளிக்கும் கொன்றைமாலையை அணிந்து விளங்கும் தலைவனே! அனைத்துயிர்களையும், சிறப்பிற்குரிய அடிமையாகக் கொண்டிருக்கும் நீர் நுமது அருளினல் செயலற்றிருக்கும் உயிர்களிடத்தில் விளங்கி நின்று அடுளியும் ஏனையோரிடத்து ஒளிந்திடுந்தும் அடுளுவதும் ஏன் என்பதை எனக்கு அடுளுவாயாக என்பதாம்.

உயிர்களனைத்திற்கும் தலைவனாக இருக்கும் நீ, சிலவுயிர்களிடத்து விளங்கித் தோன்றியும், சில உயிர்களிடத்து விளங்கித் தோன்றாதுமிடுப்பது ஏன்? என்பது வினாவாகும். மலப்பிணிப்புடைய உயிர்கள் இறைவனை உணராமையால் அவ்வுயிர்களிடத்து மறைந்தும், மலப்பிணிப்பின்றித் திருவடுள்பெற்ற உயிர்கள் இறைவனை உணர்ந்து அப்பெருமானைத் தலைவனாகவும் அவன் செயலே யன்றித் தம்செயலில்லை என்பதாகவும் உணடுவதால் அவ்வுயிர்களிடத்து விளங்கித் தோன்றியும் அருளுகின்றான் என்பது அதற்குரிய விடையாகும். விளங்கித் தோன்றுமைக்குப் பாலில் உள்ள நெய்யையும், விளங்கித் தோன்றுகைக்குத் தயிரில் உள்ள நெய்யையும் உவமை காட்டுவர். 'நேசத்தார் தம்பால் நிகழும் ததிநெய்போல்' (சிவ-போதம்), 'பிரைசேர் பாலின் நெய்போலப் பேசாதிருந்தால் ஏசாரோ' (கோயில் மூத்த திருப்பதிகம்) எனச் சான்றோர் கூறுமாறுங்காண்க.



# வழக்கு வென்றது



( சென்ற இதழின் தொடர்ச்சி )

சொ. சு. செந்திலாண்டவன் எம். ஏ.,

முதிய அந்தணர்:- நம்பியாரூரனே! இன்னும் நீ என்னையறியாமல் பித்தனென்று பேசுகிறாய்; பேயன் என்று இகழ்கின்றாய்; நீயிங்கு என்னை எத்தனை இகழ்ந்தாலும் நான் அவற்றால் நாணமாட்டேன்! வீணே வித்தகம் பேசி நிற்காதே! விரைந்து நீ பணி செய்ய வேண்டும்! இது என் கட்டளை! நினைவிருக்கட்டும்!

(நம்பியாரூரரை மறையவரின் சிவவடிவு, அவர்பால் ஈர்க்கிறது; ஆனால் அவர் பேசிய பேச்சு, கோபத்தை உண்டாக்குகிறது; இரண்டு நிலையிலும் தடுமாறி)

நம்பி:- மறையவரே! உங்களிடம் நீங்கள் கூறியபடி ஓலையிருந்தால் அதனை, அவை முன்னே காட்டுக! உண்மையை அறிவோம்!

முதிய அந்தணர்:- அடிமைத் தொழில் செய்வதற்குரிய நீ ஓலையைப் பார்க்க உரியவன் அல்லன்! சமயம் வரும்போது அவை முன் காட்டுவேன்!

(நம்பியாரூர், முதிய அந்தணர் கையிலிருந்த ஓலையைப் பிடுங்க ஓடிவருகிறார். உடன் அந்தணரும் திருமணக்காவணத்திடையே ஓடுகிறார். நம்பியாரூரர் தொடர்ந்து ஓடி யாரும் எட்ட முடியாத ஏவணச் சிலையினாரைப் பிடித்து அவர் கையில் இருந்த ஓலையை வெடுக்கெனப் பறித்துச் சினத்துடன்)

'அந்தணர் வேறோர் அந்தணர்க்கு அடிமை என்று கூறுவது என்ன முறைமை ? அவ்வடிமை ஓலையைக் கிழித்து எறிகிறேன்.

(கிழித்து விடுகிறார்).

முதிய அந்தணர்: (அவையை நோக்கி) இது முறையா? இது தகுமா? நம்பியாரூரன் என் ஓலையைக் கிழித்துவிட்டானே! அவையோரே இதற்கு நியாயங் கிடையாதா?

அவையோர்: திருமறை முனிவரே! பதற்றம் கொள்ளாதீர்! உலகில் இல்லாத நெறிகொண்டு அந்தணர்க்கு அந்தணர் அடிமை என்று கூறுகிறீரே! நீங்கள் யார்! எங்குள் ளீர்கள்?

முதிய அந்தணர்: (சினத்துடன் நகைத்து) நன்று! நன்று! உமது கூற்று! என்னைத் தெரியவில்லை? என் இருப்பும் சேய்த்தது அன்று. (திருவெண்ணெய் நல்லூர்-பக்கம் சுட்டுகிறார்). அது கிடக்கட்டும்! அறமுறை பேசுகின்றீரே, என்கையில் இருந்த ஓலையை வன்றிரல் செய்து, வலிய வாங்கி நம்பியாரூரன் கிழித்து 'அவன் எனக்கு அடிமை' என்பதை அவனே நிரூபித்துவிட்டான். அவன் என் அடிமை என்பதற்கு வேறென்ன சான்று வேண்டும்? சொல் லுங்கள், ஏன் நெடுமரம் என நிற்கின்றீர்? கூறுங்கள்!

(திகைத்து அவையோர் நிற்கின்றனர்)

நம்பியாரூரர்: (தனக்குள்) வழக்காடுதலில் இம்மறையவன் தேர்ச்சி பெற்றவன் போலும்? இவரிடத்தில் ஏன் எனக்கு இப்படியொரு விழைவு ஏற்படுகின்றது? சரி அவரிடம் பேசுவோம்.

மறையவரே! உங்கள்ஊரும் திருவெண்ணெய்நல்லூரே என்றால், உங்கள் பிழைநெறி வழக்கினை அங்கே போய்ப் பேசுவோம் வாருங்கள்!

முதிய அந்தணர்: நீ வெண்ணெய்நல்லூர் வந்தாலும் மிகவும் நல்லது! அங்குள்ள அறநெறி பிரமா அவையோர் முன்னே, உன் பாட்டனார் எழுதிக் கொடுத்த மூலவோலை காட்டி நீ அடிமையாதல் உண்மை யெனச் சாதிப்பேன். விரைந்து எம்பின் வருக! வெற்றியை உமக்குக் காட்டுகிறேன்! (போகிறார்)

(முதிய அந்தணர் முன்னே செல்ல, திருமுகக் காந்தம் சேர்ந்த இரும்பைப் போல் நம்பியாரூரரும் பின்னே கடிது செல்கின்றார். சுற்றத்தார்களும் 'இது என்ன இருவரும் ஓட்டமும் நடையுமாகச் செல்கின்றனரே நாமும் போய்ப் பார்ப்போம்' என அவர்களும் விரைகின்றனர்.)

## காட்சி 4

இடம்: திருவெண்ணெய் நல்லூர் ஊரவை.

பாத்திரங்கள்: ஊரவையினர், முதிய அந்தணர், நம்பியாரூரர், சுற்றத்தார்கள் - மற்றும் வழக்கை வேடிக்கை பார்க்கும் பொது மக்கள்.

பொழுது: பிற்பகல்.

அவைத்தலைவர்: வாருங்கள் வேதியரே! இப்படி அமருங்கள்; தாங்கள் கூறும் வழக்குதான் என்னவோ?

முதிய அந்தணர்: (அவை முன் சென்று) வேத பாரகர்களே! இதோ நிற்கும் நாவலூர் நம்பியாரூரன் எனக்கு வழி வழியடிமை; தக்க சமயத்தில் நான் அதற்குரிய ஓலையைக் காட்டியபோது, அதனை வலியவாங்கிக் கிழித்து, இங்கே வீண்வாதம்செய்ய வந்துள்ளான் என்சொல்லையும் கேட்டு, உண்மையை உணர்ந்து தீர்ப்புக் கூறுங்கள்! இதுவே என் முறைப்பாடு! இப்பொழுது தீர விசாரித்து உங்கள் ஊர் அவைக்குப் பெருமை தேடிக்கொள்ளுங்கள்!

அவைத்தலைவர்: வேதியரே! விண்ணின்றிழிந்த ஆதிசிவனைப் போல் விளங்கும் அந்தணரே! மறையவரொருவர், மற்றோர் மறையவர்க்கு அடிமையாதல் இந்த மாநிலத்தில் இல்லையே ஐயா! நீங்கள் எப்படி இவரை நம்பியாரூரரை அடிமை என்கிறீர்கள்?

முதிய அந்தணர்: அவையோரே! நான் காட்டிய அடிமை ஓலை நம்பியாரூரனுடைய தந்தைதன் தந்தை எமக்கு எழுதிக் கொடுத்ததாகும். அதை இன்று இவன் கிழித்து விட்டான். அதனாலேயே இவன் என் அடிமை யென்று தெரியவில்லையா?

அவைத்தலைவர்: (வழக்கினை முழுதும் கேட்டபிறகு) நம்பியாரூரரே! இம்முதியவர் இவ்வாறு வழக்குத் தொடுக்கின்றாரே, உங்கள் எண்ணம் என்ன என்பதை இவ்வவையில் கூறுங்கள்!

நம்பியாரூரர்: (குழப்பமடைந்து) அனைத்துநூல் உணர்ந்தவர்களே! என்னை ஆதிசைவன் என்று அறிவீர்கள்! இம்முதிய அந்தணனே என்னைத் தனக்கு அடிமை யென்று சாதிக்கின்றான்; இதற்கு நான் என்ன சொல்லுவேன்? இது ஏதோ மாயை என்றே எண்ணுகிறேன்!

அவையோர்: (முதிய அந்தணரை நோக்கி) மறையவரே! நம்பியாரூரரை உங்கள் அடிமையென்று கூறுகிறீர்கள்; அவரோ எனக்கு ஏதும் தெரியவில்லை என்கிறார். ஆகவே நீங்கள் கூறுவதை எங்கள் முன் உறுதிப்படுத்தவேண்டும். அதற்கு நீங்கள் நடைமுறையிலோ, ஆவணத்திலோ, அன்றி அயலார் சாட்சியிலோ எதனை எமக்குக் காட்ட வல்லீர்?

முதிய அந்தணர்: (சினந்து பின் தணிந்து) அவையோரே! நம்பியாரூரன் புத்தூரிலே நான் ஓலையைக் காட்டிய பொழுது, மூண்டெழுந்த சினத்தில் கிழித்தான் என்று கூறினேனே, அது படியோலைதான்! இதோ இங்கே அதற்குரிய மூலவோலையை ஆவணக் காப்பாக வைத்துள்ளேன்! இப்போது காட்டுகிறேன்!

அவையோர்: அப்படியானால் அதனை எமக்குக் காட்டுக.

முதிய அந்தணர்: முன்பு படியோலையைக் கிழித்தது போல, நம்பியாரூரன் ஏதேனும் விஷமம் செய்யாதிருக்கச் செய்தால் காட்டுகிறேன்!

அவையோர்; ஐயன்மீர்! அப்படி ஏதும் நீங்கு நேர விடமாட்டோம். நீங்கள் ஓலையை, அச்சமின்றிக் காட்டலாம்.

(அந்தணர் மடியிலிருந்து அவிழ்க்கிறார்; அவையோரின் உத்தரவுப்படி, கரணத்தான் அவர் கையிலிருந்து தொழுது வாங்கி, அதன் மடிப்பைப்பிரித்துத் தொன்மை நோக்கி மிகவும் நிறுத்தி வாசிக்க ஆரம்பிக்கின்றான்.)

கரணத்தான்: (பாடல்)

''அருமறை நாவலாதி சைவன் ஆரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக்கு யானும் என்பால்
வருமுறை மரபுளோரும் வழித்தொண்டு செய்தற்கோலை
இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கு இவை என்னெழுத்து''

(அவைத்தலைவரிடம் ஓலையைக் கொடுக்கிறான்)

அவையோர்: (வாங்கிப் பார்த்துத் தமக்குள்) எல்லாம் சரியாக இருக்கின்றது. மறையவர் கூறுவது உண்மைதான்! (நம்பியாரூரரை நோக்கி)

ஐயா! நம்பியாரூரரே! இவ்வோலையில் கண்டுள்ள எழுத்து உங்கள் பெயரைக்கொண்ட உங்கள் பாட்டனூர் கையெழுத்துத்தானு என்பதைத் தெளியப் பார்த்து அறிவீர்! அப்பொழுது தான் எம்மால் ஒரு முடிவுக்குவர இயலும்!

முதிய அந்தணர்: நம்பியாரூரனே! உன் பாட்டனூரின் கைச்சாத்து வேறு ஏதேனும் இருந்தால் இந்த ஆவணத்திேைடு ஒப்புநோக்கி உண்மையை மொழிவாய்!

(நம்பியாரூரர், அரண்தருகாப்பிலுள்ள சில ஆவணங்களை எடுத்து வரச் செய்து, இரண்டையும் ஒப்பு நோக்குகிறுர். இரண்டும் ஒத்திருத்தலைக் காண்கிறுர். மனத்தில் ஒரு குழப்பம் மூள்கிறது. அட்போது)

நம்பியாரூரர்: (தொய்வான குரலில்) அவையோரே! இரண்டு ஆவண எழுத்துக்களும் ஒத்துள்ளன. இனி நம்மால் முடிவது ஒன்றுமில்லை. உங்கள் முடிவைக்கூறி விடுங்கள்! முடிவைக் கூறிவிடுங்கள்!

அவையோர்: அவையில் காட்டப் பெற்ற ஆவணச் சான்றின்படி, நான்மறை முனிவனூர்க்கு நம்பியாரூரர் தோற்றீர்! அந்தணர்க்கு ஏவல் செய்தல் உங்கள் கடமை! இதனைத் தெளிவாக உணர்வீராக. இதுவே இச்சபையின் தீர்ப்பு.

நம்பியாரூரர்: விதிமுறை இதுவே யென்றுல் யானிதற்கு உடன்படேன் என்று கூறல் இயலுமா? உங்கள் தீர்ப்பை ஏற்றுக் கொள்கிறேன்.

அவையோர்: (முதிய அந்தணரை நோக்கி) முனிவரே! நீங்கள் காட்டிய ஓலையில் இத்திருவெண்ணெய்நல்லூரே உங்கள் இடமாகக் குறிக்கப்பட்டுள்ளதால், உங்கள் இல்லத்தை காட்டுவீராக!

முதிய அந்தணர்: (வெற்றிக் களிப்புடன் சிரித்து) என்னை ஒருவரும் அறியவில்லையா? உங்களை யெல்லாம் நான் அறிவேன்! அதுகிடக்கட்டும்; எம் பின்னே வாருங்கள்! எம் இல்லத்தைக் காட்டுகிறேன்!

(செல்கிறுர்; அவர் பின்னே அவையோரும் நம்பியாரூரம், பிறரும் கூட்டமாகச் செல்கின்றனர். முன்னே சென்ற முனிவர், திருவெண்ணெய்நல்லூர் திருக்கோயில், திருவடுட்டுறையிற் புகுந்து மறைந்து விடுகிறுர். எல்லோரும் அவரைக் காணுது திகைத்து நிற்க...)

நம்பியாரூரர் (தமக்குள்) எம்பிரான் கோயிலுக்குள் வேகமாக வந்த வேதியர் எங்குச் சென்றிருப்பார்? (தொடர்ந்து சென்று உரக்க) வேதியரே! எங்கு சென்றீர்? முனிவரே எங்கே சென்றீர்?

உடனே ஒரு பேரொளி வானில் தோன்ற அதில் விடை மேவிய சிவபெருமான் உமையோடு காட்சி நல்கி,

"நம்பியாரூரனே! முன்பு நீ கயிலையில் நமக்குத் தொண்டன்; பின் நம் ஏவலால் மண்ணகத்தில் பிறந்தாய்! உன்னைத் துன்ப வாழ்க்கைத் தொடராமல், யாம் தொடர்ந்து வந்து, தக்க சமயத்தில் தடுத்தாட் கொண்டோம்'' என்று திருவாய் மலர்கின்றார்.

(நம்பியாரூரர், தொழுதகை தலை மேலாக நின்று, மன்றுளீர் செயலோ, வலியஆட்கொண்டது? என்று ஊனெலாம் உருகக் கேட்டு நிற்க, தேவர்கள் அவர்மீது பூமாரி பொழிகின்றனர்).

இறைவன்: (புன் முறுவலுடன்) நம்பியாரூரனே, நம்மோடு வன்மை பேசியதால் இன்று முதல் நீ 'வன்றொண்டன்' என்ற நாமம் பெறுவாய்! எமக்கு அர்ச்சனை பாட்டேயாகும். ஆதலால் இவ்வுலகில் நீ வாழ்ந்து எம்மைச் சொற்றமிழால் பாடுக.

நம்பி: அஞ்சலி கூப்பி நின்று, கண்களில் ஆனந்தக் கண்ணீர் சோர, வேதியனாக வந்து, வழக்கினால் வென்று எனக்கு உணர்வு தந்து உய்யக் கொண்ட கோதிலா அமுதே! குறைவிலா நிறைவே! குணப் பெருங்கடலே! நாயினும் இழிந்தேனாகிய நான் உன்னைப் பற்றி யாதினை அறிந்தேன்? என்ன சொல்லிப் பாடுகேன்? என்ன சொல்லிப் பாடுகேன்?

இறைவன்: நம்பியாரூரனே! கவலை வேண்டாம்! முன்பு என்னைப் ''பித்தன்'' என்று மொழிந்தாய்! ஆதலால் என் பெயர் பித்தன் என்றே பாடுவாய்! புகழ் பெறுவாய்!
(பேரொளி மறைய இறைவன் மறைந்து விடுகிறான்)

நம்பியாரூரர்: உய்ந்தேன்! உய்ந்தேன்!; திருநீலகண்டனே! பிறையைச் சூடியவனே! உன் திருப்புகழ் பாடுவதே என் பணி! என்பணி! (தம்மை மறந்து பாடுகிறார்)

''பித்தா! பிறைசூடி! பெருமானே யருளாளா
எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர் அருட்டுறையுள்
அத்தா உனக்காளா யினியல்லே னெனலாமே.''

## கலெக்டர் வணங்கிய கோவில்

கோவை மாவட்டத்தில் உள்ள திருநணு (பவாநி) என்ற தலம் ஞானசம்பந்தரால் பாடப் பெற்றது. அம்பாளின் திருநாமம் ஸ்ரீ வேத நாயகி.

### கலெக்டர் அறக்கட்டளை

கி . பி 1804-ல் கோயம்புத்தூர் கலெக்டராக இருந்த வில்லியம் கேரோ துரை ஒரு சமயம் இவ்வூரில் முகாம் செய்திருந்தார். அவர் அரசு மாளிகையில் இரவில் கண்ணயர்ந்து தூங்கும் போது, ஒரு குழந்தை வந்து அவரை எழுப்பி வெளியே அழைத்து வந்ததாகவும், உடனடியாக அந்த மாளிகை இடிந்து விழுந்ததாகவும், அழைத்து வந்த குழந்தை மறைந்து விட்டதாகவும், அவரை எழுப்பிய குழந்தை அவ்வூர் அம்பாள் என்பதை அவர் உணர்ந்து பக்தி கொண்டு தினந் தோறும் வணங்கி வந்ததாகவும் அவர் எழுதிய குறிப்பிலிருந்து தெரிய வருகிறது.

அம்பாளை வெளியில் நின்றவாறே தரிசிக்க வசதியாக அவரது வேண்டுகோளின் படி சந்நிதிக்கு எதிரில் மதில் சுவர்களில் துவாரங்கள் அமைக்கப் பட்டுள்ளதை இன்றும் காணலாம்.

அம்பாளுக்கு, அவருடைய செலவில் ஒரு தந்தச்சிவிகை செய்து வைத்தார். அதில் அவரது கையெழுத்தும் உள்ளது.

பொன். முருகையன்.

சிவ சிவ

# 'ஸ்ரீ குமர குருபரர்'

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களின் அருளாணையின் வண்ணம் வெளிவரும்

## சமய இலக்கியத் திங்கள் இதழ்

### சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுட் சந்தா | (உள்நாடு) | ரூ. | 100—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 125—00 |
| ஆண்டுச் சந்தா | (உள்நாடு) | ரூ. | 7—50 |
| ,, | (ஸ்ரீலங்கா) | ரூ. | 10—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 12—00 |

### விளம்பரக் கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின்பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150—00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125—00 |
| பின் அட்டை உள்பக்கம் | ரூ. | 100—00 |
| உள் முழுப்பக்கம் | ரூ. | 60—00 |
| உள் அரைப்பக்கம் | ரூ. | 30—00 |

முகவரி :- நிர்வாக ஆசிரியர், 'குமரகுருபரர்'
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் அ. கு. எ. 612 504
(தஞ்சை மாவட்டம்)

---

| | | |
|---|---|---|
| திருவருட்பயன் (விளக்க உரையுடன்) | விலை ரூ. | 1—50 |
| நீதிநெறி விளக்கம் ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மைநெறி விளக்கம் ,, | விலை ரூ. | 0—75 |
| கந்தர்கலி வெண்பா ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மை விளக்கம் ,, | விலை ரூ. | 1—00 |
| திருவுந்தியார் ,, | விலை ரூ. | 1—25 |
| கொடிக்கவியும் வினாவெண்பாவும் ,, | விலை ரூ. | 0—75 |
| திருக்களிற்றுப்படியார் ,, | விலை ரூ. | 1—25 |
| திருக்குறள் ஒரு பொதுமறை | விலை ரூ. | 3—00 |
| மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் – கருத்தரங்கக் கட்டுரைகள் | விலை ரூ. | 3—00 |
| திருவாசகம் - ஆங்கில மொழிபெயர்ப்பு (கோ. வன்மீகநாதன்) | விலை ரூ. | 15—00 |
| தொல்காப்பியம் – நன்னூல் – எழுத்ததிகாரம் (வித்துவான் க. வெள்ளைவாரணனார்.) | விலை ரூ. | 10—00 |
| திருவருட்பயன் – நிரம்ப அழகிய தேசிகர் உரையும், திரு. க. வெள்ளைவாரணனார் எழுதிய உரை விளக்கமும் | விலை ரூ. | 5—00 |
| திருவிளையாடற்புராணம் (உரைநடை) மதுரைக்காண்டம் | விலை ரூ. | 4—00 |

நூல்களைப் பெறுதற்கான சலுகை விவரங்கள் பற்றி பின் அட்டையின் உள்பக்கம் காண்க.

# திருவிளையாடற் புராணம்

உரை நடை

## இறைவர் வில்லேந்திய சேவகராக வருதல்

சோமசுந்தரக் கடவுள், நீல நிறக் கடலில் நீந்திச் செல்லும் இரண்டு குளிர் மதியங்களைப்போல் இரண்டு திருச்செவிகளிலும் சங்கக் குண்டலங்களைத் தரித்துப் படர்ந்த சடையினை மறைத்துக் குடுமியிலே மயிலின் தோகையினை அணிந்து, கருங்கடலில் தோன்றும் செங்கதிரவனைப் போலச் சிவந்த கச்சையினை அரையில் கட்டி, அதன் புறத்தே குருதி தோய்ந்த உடைவாளைக் கட்டி, திருவடிகளில் வீரக் கழலை அணிந்து முதுகிலே அம்புப் புட்டிலைக் கட்டித் தடந்தோளிலே நீண்ட வில்லை மாட்டி உமாதேவியார் இடப்புறமே யன்றி உடல் முழுவதையும் பெற்றதைப்போலவும், அல்லது திருமால் வலப்புறத்தைப் பெற்றதைப் போலவும் ஒளி வீசும் வடிவம் முழுதும் கருநிறங் கொண்டு விளங்கினர். இவ்வாறு இறைவர் காமனும் விரும்பி அஞ்சத்தக்க கட்டழகு நிறைந்த காளைப்ப நவமுடைய வேட்டுவ வீரராய்த் தோன்றி அட்டாலை மண்டபத்தின்மீது ஏறிப் பாண்டியனின் துன்பத்தை நீக்கும்பொருட்டு அவ்வியானையின் வரவை எதிர் நோக்கியவாறு நின்றருளினர்.

## விற்சேவகர் யானையை வீழ்த்துதல்

ஐந்து கூப்பிடு தூரத்தில் அவ்வியானை வருதலைக் கண்டு விற்சேவகர், அறநெறியில்லாத அச்சோழனது கொடுங்கோலைப் போல வில்லைத் தமது வலிய தாளால் மிதித்து உடல் வளைய அதனை வளைத்து நீண்ட நாணினைப் பூட்டினர்; திருவிரலினலே தெறித்துப் பேரொலி செய்து திசை யானைகள் எட்டும் அஞ்சும் வண்ணம் சிங்கத் தொனியைக் காட்டி, வில்லினை இடக்கையிலே எடுத்துக் கொடிய நரசிங்கக் கணையைப் பூட்டித் தமது உடல் திருகவும், இடதுகால் முன்னே செல்லவும், வலதுகால் மண்டலிக்கவும்[1] இரு விரல்களாலே செவிவரை நாணினை இழுத்து விட்டார். அக்கணை விரைந்து சென்று மேகம்போல் முழங்கி வந்த அவ்வியானையின் மத்தகத்தைக் கிழித்தது. கொடிய அவ்வியானை மேகம் போலக் கதறிச் சிறி நிலத்தில் வீழ்ந்தது. அந்த யானையினைத் தாங்கலாற்ருது பூமியும் பிளவுபட்டது. ஆதி

---

1. இது பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடம் என்னும் வில்வீரர் நிலைகளுள் 'ஆலீடம்' எனப் பெயர் பெறும்.

சேடனின் ஆயிரம் முடிகளும் பிளந்தன; முன்னர் அஞ்சித் திடுக்கிட்டு ஓடிய திசை யானைகள் பண்டைய செருக்கையும் இறுமாப்பையும் பெற்றன.

யானை இறந்து கிடந்த காட்சி

கீழே இறந்து வீழ்ந்த [1]யானையானது சிவபெருமானின் திருவடியால் உதைபட்டுக் கீழேவிழ்ந்து கிடந்த இயமனை ஒத்தது. விக்கிரம பாண்டியன் சிவபெருமானை அடைக்கலம் புகுந்த மார்க்கண்டனை ஒத்தான். யானை இறந்தது கண்டு பதைக்கின்ற சமணர்கள் கால தூதர்களைப் போலத் துன்பத்தில் அழுந்தினர்.

> புதைபடக் கரித்தோல் போர்த்த புண்ணிய மூர்த்தி தாளால்
> உதைபடக் கிடந்த கூற்றம் ஒத்தது மத்த யானை;
> சுதைபடு மதிக்கோ வேந்தன் தொழுகுலச் சிறுவன் ஒத்தான்;
> புதைபடும் அமணர் கால படரெனப் படரிற் பட்டார்.

இறந்து கிடந்த யானையானது இருள் கிடந்தால் ஒத்தது; அதன் நெற்றியில் இட்ட சிந்தூரமானது சூரியனது சிவந்த கிரணத்தை ஒத்தது; அண்ணலார் விட்ட கணையினாலே பிளக்கப்பட்ட இடத்தி லிருந்து வெளிப்படும் குருதியானது இருள் முழுவதையும் உண்ணுதற்குக் காலையில் எழுந்த இளஞாயிற்றை ஒத்தது; சமணர்களின் புன்னெறியில் ஒழுகும் கொடிய சோழனுடைய கொடுங்கோலை வெள்ளிய கொம்பாக ஏந்தி யானையின் வடிவத்தைக் கொண்டுவந்த கொடுங் கலியை விக்கிரம பாண்டியனின் செங்கோலானது சிவபெருமான் விடுத்தருளிய நரசிங்கக்கணை வடிவந்தாங்கி அழித்தது. இடி விழப் பட்ட மலைபோல்விழ்ந்த யானையின் வாயினும், அம்புபட்ட வாயினும் அருவிபோலக் குருதிகள் பெருகின. அம்மலையில் தவழும் கரிய மேகத்தைப்போலப் பருந்துகளும், பசாசுகளும், பூதங்களும் தசையை உண்ணும் பொருட்டு மொய்த்தன. இறந்துகிடந்த யானையைக் கண்ட விக்கிரம பாண்டியன் மகிழ்ச்சி அடைந்தான்.

யானையின் குருதியைக் குடிப்பதற்கு வந்த கரிய உடலையுடைய பேய்க்கூட்டம் போலச் சோழனது சேனை பின்னே தொடர்ந்து வந்த சமணர்களைப் பாண்டியன் கண்டு சீறினான். அவன் குறிப்பின் வழி ஒழுகும் வேற்படை ஏந்திய வீரர்கள் விரைந்தோடிப்போய்ச் சமணர்

---

1. இந்த யானை வீழ்ந்து இறக்கும்போது இலத்தியைச் சொரிந்தது; அஃது 'இலத்தி மலை' எனப் பெயர் வழங்குகிறது. இறந்த யானையின் உடல் 'யானை மலை' எனப் பெயர் பெறுகின்றது.

களைத் துரத்தினர்; அவர்களில் சிலரைத் தண்டத்தால் அடித்தனர்; சிலரைக் குறுக்காக வளைத்துத் தடுத்து அவர்களுடைய கையில் தாங்கிய கமண்டலங்களைத் தூளாக உடைத்தனர்; சிலர் உடுத்தியபாயை மயிற்றோகையோடும் துண்டாகக் கிழித்தனர்; பலரை வாய்க்காலில் விடுத்தனர்; சிலரை மானத்தைப்போக்கி ஓட்டினர். சமணர் அனை வரும் அடிபட்டுச் செய்த மாயத்தை இழந்து படைகளோடும் முறி பட்டு நடுக்கத்திலும் பாவத்திலும் மூழ்கி, மயங்கி வாடிப் பழிப் படைந்து ஒளிந்துப் பதுங்கி ஓடினர்.

பின்னர் விக்கிரம பாண்டியன், யானையைக் கொன்று அட்டாலை மண்டபத்தில் எழுந்தருளியிருந்த வீரராகிய இறைவரின் திருவடி களைத் தன் கைகளால் பற்றிக்கொண்டு, ''பசு ஞானம் பாச ஞானங் களைக் கடந்தவரே! நீர் இங்கே இக்கோலத்துடன் எக்காலத்தும் வீற்றிருப்பீராக'' என்று வேண்டிப் பிரார்த்தித்தான். சிவபெருமான் அவன் வேண்டுகோளுக்கு உடன்பட்டருளினர்.[1]

மாதங்கந் தடிந்(து)அட் டாலை
மண்டபத் திருந்த வீரன்
பாதங்கள் கையாற் பற்றிப்
பாண்டியன் இரந்து வேண்டிப்
''போதங்கள் கடந்தாய்! என்றும்
பொலிய இங்(கு) இருத்தி'' என்ன
வேதங்கட்(கு) அருத்தம் சொன்ன
வேதியன் அதற்கு நேர்ந்தான்.

பாண்டியன் பின்னும் சில வரங்களைப் பெற்றுக்கொண்டு அரண் மனையை அடைந்தான்; சோமசுந்தரக் கடவுளைக் காலந்தோறும் சென்று வழிபட்டு வந்தான். அப்போது மன்மதன் என்று சொல்லப் படும் அழகு நிறைந்த இராசசேகரன் என்னும் புதல்வனைப் பெற்றுப் புவியினைப் பாதுகாத்து வந்தான்.

நரசிங்கப் பெருமான்

சிவபெருமான் யானையின்மீது எய்த கணையானது, அங்கே உக்கிர நரசிங்கமாக எழுந்தருளியிருந்தது. எல்லா உலகங்களையும் அழித்து அவற்றை மீளவும் படைத்தருளும் உருத்திர மூர்த்தியின் வீரசத்திகளுட் சிலவற்றை அவனருளால் பெற்று இறவாத

---

1. அன்று முதல் சிவபெருமானுக்கு, ''அட்டாலைச் சேவகர்'' என்ற ஒரு திருநாமம் வழங்கலாயிற்று.

அவுணனுகிய இரணியனின் மார்பைப் பிளந்த [1]நரசிம்ம மூர்த்தியை உரோமச முனிவர் அங்கே வந்து வணங்கி வழிபட்டுப் பெரிய தவங்களைச்செய்து தம் பெயர் விளங்க ஒரு தீர்த்தம் உண்டாக்கிப் பெரும் பேற்றினை அடைந்தார். பிரகலாதனும் அங்கே வந்து தவஞ் செய்து அழியாத பெருவரங்களைப் பெற்ருன்.

உலகெலாம் அழித்து மீளவுண் டாக்கும்
உடுத்திரன் விரசத் தியினிற்
சிலதரித்(து) இறவா அவுணன்மார்(பு) இடந்த
சிங்கநா யகனையங்(கு) எய்தி
அலகில்மா தவஞ்செய்(து) உரோமசன் தன்பேர்
அறியஓர் தீர்த்தமுண் டாக்கி
இலகுபே(று) அடைந்தான்; பிரகலா தனுநோற்(று)
ஈறிலாப் பெருவரம் அடைந்தான்.

செய்யுள் — 42
ஆகச் செய்யுள் — 1427

## 23. விருத்த குமார பாலரான படலம்

### கௌரியின் பிறப்பு

விக்கிரம பாண்டியனுடைய ஆட்சிக்காலத்தில் மதுரையில் [2]விருபாக்கன் என்னும் அந்தணன் ஒருவன் இருந்தனன். அருந்ததி போலும் கற்பினையுடைய [3]சுபவிரதை என்பவள் அவன் வாழ்க்கைத் துணைவியாக விளங்கினுள். அவர்கள் இருவரும் நெடுங்காலமாக

---

1. இந் நரசிம்ம மூர்த்தியை விக்கிரம பாண்டியன் யானை மலையில் பிரதிஷ்டைசெய்து வழிபட்டான் என்று திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் கூறுகிறது.

2. விருபாக்கன் - மேல் நோக்கிய விழியையுடையவன்; இப் பெயர் சிவபெருமான் திருப்பெயர்களுள் ஒன்று; இவ் வந்தணன் மதுரையை அடுத்துள்ள பெருங் கிராமத்தில் வாழ்ந்து வந்தவன் எனத் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் கூறும். பெருங் கிராமம் - இஃது ஐந்நூறு குடிகள் நிறைந்த ஊர் ஆகும். இதனைப் 'பெருங் கடுனை' என்ற ஊர் என்றும் கூறுவர். இங்கு வைணவர்கள் மிகுதியாக உள்ளனர் என்பர்.

3. சுபவிரதை - இது நல்ல விரதமுடையவள் என்னும் பொருளைத் தருவது.

மகப்பேறின்மையால் அளவிறந்த சிவதருமங்களைச் செய்தனர்; பல விரதங்களை மேற்கொண்டனர்; சத்தமாதர்களை வழிபட்டுப் பெரிய தவத்தைச் செய்து ஒரு பெண் குழந்தையைப் பெற்றனர். அக் குழந்தைக்கு, "கௌரி" என்னும் பெயரிட்டு அழைத்தனர்.

### கௌரியானவள் பராசத்தி மனுவைச் செபித்து வருதல்

கௌரிக்கு ஐந்தாண்டுகள் நிரம்பப் பெற்றன; அவள் பிறவிப் பிணியைப் போக்குதற்குச் சிறந்த வழியை ஆராயுஞ் சிந்தையுடையவளாய்த் தன் தந்தையை வணங்கி, ''ஐயா! இப்பிறவியை ஒழிக்கும் தெய்வத்தன்மை பொருந்திய மந்திரம் யாது?'' என்று வினவினள். விருபாக்கன் அதிசயித்து மன மகிழ்ந்து தன் புதல்விக்குப் பராசத்தியின் திருமந்திரத்தை அன்புடன் உபதேசித்தான். முற்பிறப்பில் செய்த அரிய தவத்தின் குறையினை இப்பிறவியில் நிரப்புதற்கு வந்த கௌரியம்மை தந்தைபால் அம்மந்திரத்தைச் சிரத்தையோடு கேட்டுத் தெளிந்து அதனை நாத்தழும்பேறச் செபித்துக் கொண்டு வந்தாள்.

### விருபாக்கன் கௌரிக்குத் திருமணம் செய்ய எண்ணுதல்

விருபாக்கன், ''நான் பெற்ற தவக் கொழுந்தாகிய புதல்விக்கு நன் மரபினனாய், பிரமசாரிய நெறியில் ஒழுகுபவனாய், வேதங்களை அறிந்தவனாய், மாண்பு மிகுந்த மகா சைவனாய் உள்ளானொருவன் எப்பொழுது மணவாளனாக வருவானோ!'' என்று தன் உள்ளத்தில் இடைவிடாது சிந்தித்துக்கொண்டிருந்தான். கௌரிக்கு உற்ற வயதாகத் திருமணப் பருவமும் வாரா நின்றது.

### கௌரியின் திருமணம்

அப்பொழுது ஒருநாள் அயலூரில் உள்ளவனும் வீடுகள் தோறும் பிச்சை ஏற்று உண்பவனுமாகிய வைணவப் [1]பிரமசாரி ஒருவன் கௌரியின் வீட்டிற்கு வந்து பிச்சைவேண்டி நின்றான். அங்ஙனம் வந்து பிச்சை கேட்ட அப்பிரமசாரிக்கு, விருபாக்கன் தனது பெண்ணைக் கொடுக்க விருப்பங்கொண்டு தன் மனைவியாகிய சுபவிரதையையும், அவனுடைய சுற்றத்தாரையும் கலந்து ஆராயாமல் சிறிதும் அச்சமின்றித் துணிந்து நீரினை எடுத்து அவனுடைய கையில் வார்த்தான்; சிலம்பினை அணிந்த செல்வியாகிய கௌரியின் ஊழ்வினையும், பிச்சைக்கு வந்த பிரமசாரியின் நல்வினையின் பகுதியும் ஒன்று சேர்ந்ததனாலே விருபாக்கன் மந்திரத்துடன் தாரை

---

1. இவன், பாலிய முதல் விவாக காலம் வரையும் விரத நியமத்துடன் இருக்கும் பௌதிகப் பிரமசாரி ஆவன்.

வார்த்தான். அதனைக் கேட்டுச் சுபவிரதையும், உறவினரும் மனந் தளர்ந்து. "குலமும் கோத்திரமும் ஆராய்ந்து பார்த்தானோ? குடிப் பிறப்பின் மேன்மையை அறிந்தானோ? ஒழுக்கமும், கல்வியும் நிறைந் தவன் என்று கண்டானோ? எந்த ஊர் என்றுவது உணர்ந்தானோ? ஒன்றினையும் அறிந்துகொள்ளாமல் தன் மகளைத் தத்தம் செய்து விட்டானே! எல்லா நூல்களையும் கற்றறிந்த இவன் இங்ஙனம் செய்தது, விதியின் வழியே மதி செல்லும் என்பதனையே புலப்படுத்து கிறது" என்று கூறி வருந்தினர். பிறகு பிரமசாரியின் குடி, கோத் திரம், சூத்திரம் முதலாயவற்றை அறிந்து, "இவன் குடி முதலிய வெல்லாம் நம் மரபுக்கு ஒருவகையில் ஒத்திருக்கின்றன; ஆயினும் வைணவ மதக் கட்டுண்டு ஒழுகும் குற்றம் ஒன்றுதான் அவனிடம் உளது; முன்னரே நீர்வார்த்துத் தத்தஞ் செய்தபின் இனி எங்ஙனம் மறுப்பது? ஆதலால் அவனுக்கு மணம் செய்து கொடுப்பதே தகுதி" என்று உடன்பட்டனர். இங்ஙனம் சுபவிரதையும் சுற்றத்தாரும் இசைந்தபின் விருபாக்கன் வேதத்துள் விதிக்கப்பட்ட [1]எட்டுவகை மணங்களுள் [2]பிரம மணத்திற்குக் கூறிய விதிப்படி கௌரிக்குப் பொன்னுபரணங்களை நிறையப் பூட்டி அழகு செய்து ஓமத்தியின் முன் அப் பிரமசாரிக்கு விவாகஞ் செய்துகொடுத்தான்; பின் மங்கல வரிசைகள் (சுப சீதனங்கள்) பலவற்றையும் நல்கிக் கௌரியை மணவாளனோடு அவன் நகருக்கு அனுப்பிவைத்தான்.

கௌரியின் புக்ககத்தார் வெறுப்புக்கொள்ளல்

வறுமையில் வாடுபவனுக்குப் பொற்கிழி கிடைத்தாற் போல வும், பலர் இல்லந்தோறும் சென்று ஐயம் பெற்று உண்டு திரிந்த மகன் மணமகனாகத் திருமகளை மணஞ்செய்து வருவான் போலவும், வைணவப் பிராமணன் கௌரியோடு தன் மனையினை வந்தடைந் தான். வைணவ மதத்தை மேற்கொண்டு ஒழுகுகின்ற அவனுடைய தாய் தந்தையர்கள் அதனைக் கண்டு மனம் பொறாது வாடினர்; தமது இல்லிற்கு மருமகளாய் வந்த கௌரியின் சிவ வேடத்தையும்,

---

1. எட்டுவகை மணம் - பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என்பன; இவற்றை "மறையோர் தேஎத்து மன்ற லெட்டு" என்று தொல் காப்பியமும், "அந்தணர் அருமறை மன்றல் எட்டு" என்று இறை யனாரகப் பொருளும் கூறும்.

2. பிரமமணம் - பிரமசரியங் காத்தவனுக்குக் கன்னியை அலங் காரஞ் செய்து ஓமத்தீ முன்னர்க் கொடுப்பது.

சிவ சிந்தனையையும் கண்டு பொறுமையினாலே தமது கருகிய உடல் போல் மனமும் வெந்து அவளை வேறாக ஒதுக்கி வைத்துச் சிறிதும் விரும்பாராய் நிந்தித்து ஒழுகுவாராயினர். தாம் ஒருநாள் அயலூரில் நடக்கும் தம் உறவினரின் திருமணமத்திற்குச் செல்ல நினைத்து, கௌரியைத் தனியே வைத்துவிட்டு, வீட்டைப் பூட்டிக்கொண்டு சென்றனர்.

கௌரி தன் சிந்தையில் பலவாறு எண்ணுதல்

திருநீறே உள்ளத்திலுள்ள மாசினைப் போக்கித் தூய்மை செய்ய வல்லது என்று [1]உபநிடதங் கூறுவதைக் கேட்டும், மண்ணை அழுக்குண்டாகப் பூசும் வடிவினையுடைய வைணவர்கள் அகன்ற பின்பு, வீட்டிலே தனித்திருக்கும் கௌரியானவள், குற்றம் ஒழியுமாறு ஒரு சிவனடியாரைக் காணப் பெறாமல், ''இன்று என் கண் மாசடைகின்றது'' என்று முதிர்ந்த தலையன்பினால் கவலையுறுவாளாயினாள்; சிவனடியார்களிடத்து அன்பில்லாத மனமே இரும்பு; சிவனடியார்களுக்கு நாடோறும் தொண்டு செய்யாத உடலே மரம்; காது கண் முதலிய ஐம்பொறிகளையும் சிவனடியாரிடத்துச் செலுத்தாத வடிவமே பாவை; வேதத்திலே துதிக்கப்படும் சைவமாகிய தவநெறி அல்லாத பிற நெறிகளே பிறவிக்கு ஏதுவாகிய நெறிகள்; எல்லா உயிர்களுக்கும் உறுதிகளாயுள்ளவை இம்மை மறுமை இன்பங்களே என்று கூறுவர்; அவற்றை அருள வல்லவர் எல்லாமும் தாமேயாகி எவ்வுயிர்க்கும் உயிராயுள்ள சிவபெருமானே என்பர்; அவரைச் சிந்திப்பார்க்கு மனம் வாக்குக் காயம் என்னும் மூவகையாலும் செய்யப்படும் உண்மையாகிய பத்தி நெறி வந்து கைகூடும் என்பர்; அப்

---

1. இங்குப் பஸ்மஜாபாலம். காலாக்கினி ருத்திரம் முதலிய உபநிடதங்கள் ஆகும்.

2. இங்கு, ''ஈசனுக்கன் பில்லார் அடியவர்க்(கு)அன் பில்லார் எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும்அன் பில்லார், பேசுவதென் னறிவிலாப் பிணங்களைநாம் இணங்கில் பிறப்பினொடும் இறப்பினொடும் பிணங்கிடுவர் விடு நீ, ஆசையொடும் அரனடியார் அடியாரை அடைந்திட்(டு) அவர் கரும முன்கரும மாகச்செய்து, கூசிமொழிந்(து) அருள்ஞானக் குறியினின்று கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே'' என வரும் சிவஞான சித்தியார் திருவிருத்தமும் நோக்கற்பாலது.

பத்தி வழியில் நிற்பவருக்கு வினைகளால் வரும் துன்பங்களைப் போக்கு தற்பொருட்டு எடுத்த வடிவம் அச் சிவபெருமானின் அடியார்களுடைய திருவேடமன்றோ!" என்று இங்ஙனம் கௌரி பலவாறு சிந்தித்துக் கவலைகொண்டிருந்தாள்.

சிவனடியார்க்(கு) அன்பிலாச் சிந்தையே
இரும்(பு); ஏவல்செய்து நாளும்
அவனடியார் திறத்தொழுகா ஆக்கையே
மரம்; செவிகண் ஆதி ஐந்தும்
பவனடியா ரிடைச்செலுத்தாப் படிவமே
பாவை; மறைபரவுஞ் சைவ
தவநெறியல் லாநெறியே பவநெறியென்
றளியளாய்த் தளர்வாள் பின்னும்.

எனைத்துயிர்க்கும் உறுதிஇக பரம்என்ப;
அவைகொடுப்பான் எல்லாந் தானாய்
அனைத்துயிர்க்கும் உயிராகும் அரன்என்ப;
அவன்அறிவார்க்(கு) அங்கம் வாக்கு
மனத்துறுமெய்ப் பத்திவழி வருமென்ப;
அப்பத்தி வழிநிற் பார்க்கு
வினைத்துயர்தீர்த் திடவெடுத்த வடிவென்ப(து)
அவனடியார் வேடம் அன்றோ!

### சோமசுந்தரக் கடவுள் கிழவேதியராய் வருதல்

அப்பொழுது சோமசுந்தரக் கடவுள் கௌரியின் கவலையைப் போக்கத் திருவுளங்கொண்டு, சிரசிலும் காதுகளிலும் கழுத்திலும் மார்பிலும் புயங்களிலும் கைகளிலும் உருத்திராக்கம் தரித்துக் கையிலே தம்மைப்போலப் பன்னெடுங்காலம் பழகியதாகிய ஒரு பெரிய புத்தகந் தாங்கிக் கயல் மீனின் முள்ளைப்போன்ற நரையும், திரைந்த கபோலமும், அடிக்கடி கனைக்கின்ற நெஞ்சும், ஒரு புறம் சரிந்த கௌபீனவுடையும், தலை நடுக்கமும், மேலாடை தவழும் தோளும், முப்புரி நூல் தவழும் திருவெண்ணீறு அணிந்த மார்பும், ஒரு கையிற் பிடித்த குடையும், தண்டினை ஊன்றி அதனோடு குனிந்தசைகின்ற திருமேனியுங்கொண்டு முதிர்ந்த ஒரு விருத்த வேதியர் வடிவுடன் பலநாள் உணவு இல்லாத பெரும்பசியினர் போல மிக வருந்தி வாட்டமுடன் கௌரி இருக்கும் வீட்டின்கண் வந்து புகுந்தார்.

